“ பாரிஸ் நகருக்குப் போவானேன், எக்ஸ்போர்ட் க்வாலிடி எஸ்ஆர்எம் சேலைகளைப் பெற! ”




# ஏக்ஸ்போர்ட் க்வாலிட்டி ஏஸ் ஆர் ஏம் துணிகள் இந்தியாவிலேயே கிடைக்கின்றன இப்போது.

வெளிநாட்டுத் தரமுள்ள எஸஆர்எம் சேலைகள். பூச் கோலங்கள், வித வித வடிவுகள், சம்பிரதாய ரகங்கள். இயல்பான சாயல்களிலும், வேறுபட்ட வர்ணங்களிலும் வருபவை. தூய பருத்தியிலிருந்து தயாரிப்பு: முழு வாயில், ஆர்கண்டி, ஜெகார்டு, ஜூபேட், புட்டா. உலகத் தரம் வாய்ந்தவை.

கிடைக்குமிடம்: உங்களூர் எஸ்.ஆர்எம் ஸ்டாக்கிஸ்டு.

**ஸ்ரீ ராம் மில்ஸ் லிட்**

கண்பத்ராவ் கதம் மார்க், வொர்லி,
பம்பாய் 400 013

Creative Unit-A 1211

# கல்கி

## இந்த இதழில்...





**கடல் காற்றும் கால்வாய் நாற்றமும்!**

கடல் காற்று: இந்தியக் குடியரசு.
கால்வாய் நாற்றம்: அதில் நிலவும் ஊழல்!

**டெலிவிஷன் தேவையா?**

டிவி வருகிறதென்றால் மகிழ்ச்சியாகவும் இருக்கிறது.
பயமாகவும் இருக்கிறது!

**சிறப்புச் சிறுகதை**

போர்க்களத்தை நிலைக்களனாகக் கொண்டு இதைவிடச் சிறந்த கதை சமீப காலத்தில் வெளியானதில்லை, நிச்சயம்!

**எண்பதிரண்டு எழுத்தாளர்!**

எத்தனையோ பெரிய பதவிகளைக் கண்டுவிட்டார் என்றாலும் எழுத்தாளர் என்றால்தான் நமக்குப் பெருமை!

**மரத்தில் ஏறிவிட்டேன்: இறங்கத் தெரியலையே!**

மேலட்டை: வண்ணப் படம்: பரணிநாதன்


ஆனந்த, ஆனி 23
ஜூலை 7, 1974


★

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| இதர நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |

# பச்சிளம் மேனியைக் காப்பதற்கே
# பாப்பா காட்டும் வழி உமக்கே

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர் –

மேனியிலே அதி நுட்பமான பகுதி- உங்கள் முகத்தின் சருமம்; பச்சிளம் தளிர் போன்ற அதனைப் பாதுகாக்கத் தக்க பவுடர் எது? பாப்பாவின் மேனியைக் காப்பாற்றும் பூப்போன்ற மென்மையான பவுடரே தேவை. மழமழ மென்மையோடு குளுமையாக வைத்திருப்பதற்கு — ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். எங்கெங்குமே, எழில்கொஞ்சும் இளம் செல்வியர் உபயோகிக்கும் பவுடர்.

பிறந்த நாளைய பிஞ்சு மென்மையோடு
உங்கள் மேனி மிளிரப் பேருதவி

*Johnson & Johnson**




* Trade Mark
© Johnson & Johnson.

லிண்டாஸ்-(க). 4-140 TM

# ஃபயூராடான் உபயோகித்தால் அதிக நெல் விளைச்சல்

## டாடா ஃபைஸன் ராலீஸ் வழங்கும் புதிய ஃப்யூராடான் 3ஜீ மருந்து

**நெற்பயிரைத் தாக்கும் பூச்சிகளைக் கொல்லுகிறது. இது பயிர் முழுவதும் பரவி செயலாற்றுவதோடு, அதிக பச்சையான நெற்பயிரைத் தருகிறது; ஹெக்டேருக்கு மற்ற பூச்சிக் கொல்லிகள் தருவதை விட 3 மெட்ரிக் டன்னுக்கும் அதிகமாக விளைச்சல் தருகிறது.**

உலகெங்குமுள்ள நெற்பயிர் விளையும் பிரதேசங்களில் மிகச் சிறந்த பூச்சிக் கொல்லி என்று போற்றப் படுகிறது ஃப்யூராடான் 3ஜீ. இது பயிர் முழுவதும் பரவும் நஞ்சியல்பு கொண்ட மருந்தாகும். இதை நிலத்திலும், நெல் வயலிலுள்ள நீரிலும் போட்டால் பயிர்கள் வேர்கள் மூலம் அதை உறிஞ்சி, பயிர் முழுவதும் பரப்புகின்றன. இதனால் பயிரைக் கடித்து மெல்லும், துளைக்கும் மற்றும் அதன் சாற்றை உறிஞ்சும் பூச்சிகளைக் கட்டுப் படுத்துகிறது.

உங்கள் நெற்பயிருக்கு சிக்கனமான புதியமுறை, அதாவது விதைகள் / நாற்றுக்களைத் தோய்த்து எடுக்கும் முறைப்பற்றி உங்கள் வியாபாரியைக் கேளுங்கள். அதை ஒரு முறை கையாண்டு பாருங்கள். வியப்பூட்டும் பலன்களைக் கண்டு நீங்கள் அதிசயிப்பீர்கள்.

வியாபார விவரங்களுக்கு எழுதுக:
**ராலீஸ் இந்தியா லிமிடெட்**
ஃபெர்டிலைஸர்ஸ் & பெஸ்டிஸைட்ஸ் டிவிஷன், 21, ரேவின் ஸ்ட்ரீட்,
பம்பாய் 1.

மற்ற இடங்கள்: சென்னை, கல்கத்தா, லக்னௌ.

**விசேஷ சிறப்பம்சங்கள்**
ஃப்யூராடான் 3ஜீ, மேலாகத் தூவப்படும் பூச்சிக்கொல்லிகளை விடச் சிறந்ததுமாகவும் படுகிறது.

- நெற்பயிரைத்தாக்கும் தண்டு துளைப்பான், தத்துப் பூச்சி, ஆனைக்கொம்பன், அங்குள் பேன் ஆகிய பெரும்பாலான பூச்சிகளைக் கட்டுப்படுத்துகிறது.
- விசேஷ கருவிகளின் உதவியின்றியே கையாலேயே இந்த மருந்தை எளிதில் பத்திரமாகப் போடலாம்.
- கடித்து மெல்லும் பூச்சிகளையும் சாற்றை உறிஞ்சும் பூச்சிகளையும் கட்டுப் படுத்துகிறது.
- பூச்சிகளை விரைவில் தாக்குவதற்காக பயிர் முழுவதும் உடனடியாகப் பரவி விடுகிறது.
- இதை மழை அடித்துச்செல்ல முடியாது... தெளிப்பு மருந்தையும் விட நீண்ட காலம் பாதுகாப்புத் தருகிறது.
- தானிய மணியில் மருந்து தங்கவோ, காற்றடிக்கவோ செய்யாது.
- இந்தப் பயிரை அழிக்கும் பூச்சிகளை மட்டுமே பாதிக்கும்; பயிருக்கு சாதகமான பூச்சிகளுக்கு ஆபத்தல்ல.

3
INSECTICIDE
furadan
POISON

RALLIS
TATA FISONS
PESTICIDES

fmc furadan®
IS A REGISTERED TRADEMARK OF FMC CORPORATION
PATENT NUMBER 97322 OF FMC CORPORATION

**அதிக நெல் விளைச்சல் பெற... ஃப்யூராடான் 3ஜீ**

OBM-3134 TAM

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 33 — இதழ் 49

# கடல் காற்றும் கால்வாய் நாற்றமும்!

மெரினா மணற்பரப்பில் அமர்ந்து சுத்தமான கடற் காற்றை அனுபவித்து விட்டு லாயிட்ஸ் ரோடு வழியே திரும்பினால், பக்கிங்ஹாம் கால்வாயைக் கடக்கும்போது மூக்கை மூடிக்கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது!

சுதந்திர பாரதம், ஜனநாயக இந்தியா என்றெல்லாம் இறுமாந்து இருந்துவிட்டு, லஞ்ச ஊழல்கள், தில்லுமுல்லுகள் பற்றிக் கேள்விப்படும்போது வெட்கித் தலை குனியத்தான் வேண்டியிருக்கிறது!

பக்கிங்ஹாம் கால்வாய் சுத்தப்படுவதாகவும் காணோம்; நமது அரசியல் சாக்கடை தூய்மையடைவதாகவும் காணோம்!

தூய்மை பெற வழியில்லாமல் போகவில்லை; தூய்மை பெற நமது அரசியல் மறுக்கிறது அவ்வளவுதான்!

நமது அரசியலில் உள்ள ஊழல்கள், சுரண்டல்கள், தகிடுதத்தங்கள் அனைத்துக்கும் அடிப்படைக் காரணம் நமது தேர்தல் முறைதான் என்று கண்டார் ராஜாஜி. அதையே மீண்டும் வலியுறுத்தித் தேர்தல் முறையை மாற்றியமைக்கச் சிறிய யோசனைகளையும் கூறுகிறார் திரு ஆர். வேங்கடராமன்.

இன்று தேர்தலில் ஏராளமாய்ச் செலவாகிறவை இரண்டு. ஒன்று பணம்; மற்றது பயனற்ற வார்த்தைகள்.

அறிஞர் பெருமக்கள் இந்த இரண்டுக்காகவும் அஞ்சுவார்கள். எனவே சிறந்த வேட்பாளர்களை மக்கள் பெற முடிவதில்லை.

தரக் குறைவான வேட்பாளர்கள், தேர்தலுக்குச் செலவழித்த பணத்தைவிட அதிகமாகவே பதவியில் உள்ளபோது சம்பாதிக்கப் பார்ப்பார்கள். இது இயற்கை. மக்களைக் கவரக் கூடிய வெற்று வார்த்தைகளை, நிறைவேற்ற முடியாத வாக்குறுதிகளைச் சீக்கிரமே மறப்பார்கள். இதுவும் இயற்கை.

தனி நபர்களான வேட்பாளர்கள் தவிர, கட்சிகளும் பல பெரிய நிறுவனங்களிலிருந்து தேர்தலுக்கு முன்பாக நன்கொடைகள் பெறுகின்றன. ஒரு கட்சி பதவிக்கு வந்ததும் தனக்கு உதவிய நிறுவனங்களுக்குச் சலுகைகள் காட்டுகிறது. இதுவும் லஞ்சமே.

இந்த ஊழல்களெல்லாம் ஒழியவும் வேண்டும்; அறிஞர் பெருமக்களை வேட்பாளராக விளங்குமாறு கவர்ந்திழுக்கவும் வேண்டும். இந்த இரண்டு மாங்கனிகளையும் பெற ஒரே கல் தேர்தல் முறைகளைச் சீர்படுத்துவதுதான். இதற்காகவே ஜெயப்பிரகாசர் முக்கியமாகப் போராடுகிறார்; ஆர். வி.யும் எளிதில் கடைப்பிடிக்கக் கூடிய சிறந்த யோசனைகளைக் கூறியுள்ளார். அவற்றில் சில:

(அ) பெரிய நிறுவனங்கள் கட்சிகளுக்கு நன்கொடைகள் தரு முன்னர் அதற்குப் பங்குதாரர்களிடம் அனுமதி பெறவேண்டும் எனச் சட்டம் இயற்றுதல் (ஆ). அரசியல் கட்சிகளின் தேர்தல் கணக்கு வழக்குகளைத் தேர்தல் அதிகாரிகள் தணிக்கை செய்யும் அதிகாரம் பெறுதல். தில்லுமுல்லுகள் காணப்பட்டால் கட்சிக்கு அளிக்கப்பட்ட அங்கீகாரம் ரத்தாகும். (இ) பொதுக் கூட்டங்களில் பேசுவது, வேட்பாளரே வீடு வீடாகச் சென்று வோட்டுக் கேட்பது ஆகியன தவிர இதர பிரசார முறைகள், ஆதரவு தேடும் வகைகளுக்குத் தடை விதித்தல், (ஈ) ஒவ்வொரு கட்சிக்கும் வேட்பாளருக்கும் ஒரே ஒரு விதமான சுவரொட்டி மட்டும் அனுமதித்தல். (உ) ஊரில் பொது மேடை அமைத்து, அந்த ஒரு மேடையில் மட்டுமே வெவ்வேறு காலங்களில் பல கட்சியினர் ஏறிப் பிரசாரம் செய்ய அனுமதித்து அதற்குக் கட்டணமும் வசூலித்தல்.

இந்த யோசனைகள் அமுலானால் கிளர்ச்சிகள் மூலம்தான் மக்கள் இந்நாட்டில் நியாயம் பெற முடியும் என்ற நிலைமை அடியோடு மாறிவிடும். அரசியல் சாக்கடை தெளிந்த நீரோடையாகும்.


அப்பாடா, ஒதுங்க இடம் கிடைத்தது
தி.மு.க செல்வாக்கு
கச்சத்தீவு






தோளிலிருந்து தொங்கிய டிரான்ஸிஸ்டர் ஏதோ அலறிக் கொண்டிருக்க, கரத்திலிருந்த மோதகத்தைக் கிரிக்கெட் பந்தாகப் பாவித்து உயரத் தூக்கிப் போட்டுப் பிடித்தார் விநாயகப் பெருமான். கூடவே, "சே ஸௌ பீஸ் நௌ எடுத்துவிட்டு இவர்களை இரண்டாவது இன்னிங்ஸில் சார் தஸ் தோவுக்கு அவுட்டாக்கி விட்டார்களே!" என்று மொழிந்தார்.

அப்பத்தையும் அவல் பொரியையும் ஆவலோடு ஒரு கணம் பார்த்த மூஷிகர், மூக்குக் கண்ணாடியைச் சரி செய்துகொண்டு மெதுவான குரலில், "ஹிந்தி ஆதிக்கம் ஒழிக" என்றார்.

"என்ன சொன்னாய்?"

"பேசத்தான் வேண்டும் என்றால் உளறாமல் நல்ல ஹிந்தியாகப் பேசக் கூடாதா ?"

"இந்த நேர்முக வர்ணனை ஹிந்தி மட்டும் என்ன வாழ்கிறது ? ஒரே ஆங்கிலக் கலப்பட மயம்தான்" என்றார் கணபதி. "அதைவிட ஆங்கில ரன்னிங் காமெண்டரியோடு நிறுத்திக் கொள்வதே மேல்!"

"99.9999 சதவீதம் கிரிக்கெட் ரசிகர்களின் மனத்தில் உள்ளதை அப்படியே சொல்லிவிட்டீர்கள்" என்றார் மூஞ்சூறு. இருந்தாலும் நமது ஆட்டக்காரர்கள் இப்படிக் காலை வாரிவிட்டிருக்க வேண்டாம்."

"அப்படிக் குறைப்பட்டுக் கொள்வதைவிட இங்கிலாந்து ஆட்டக்காரர்கள் பிரமாதமாய் ஆடினார்கள் என்று வாழ்த்தக் கற்றுக் கொள்ளலாமே?"

"வாஸ்தவம். சரியாக ஆடாததை மன்னிக்கலாம் ஆனால் மைதானத்துக்கு வெளியே நம்மவர் நடந்து கொண்ட விதத்தை மன்னிக்கவே முடியாது. தவிர, 'ரஞ்சி டிராஃபி மாட்ச் நடக்கும் போதே அயல்நாட்டிலிருந்து வெகு வேகமாகப் பந்து வீசக்கூடியவர்களைத் தருவித்து ஆடச் சொல்லி நமது ஆட்டக்காரர்களின் தன்னம்பிக்கையை வளர்க்க வேண்டும்' என்று ஒருவர் நாளிதழில் எழுதியிருக்கிறார்."

"அடேடே, நீ பத்திரிகை படிக்கக்கூடச் செய்வாயா ? கடிப்பதோடு சரி என்று நினைத்தேன் !"

"படிக்கும்போதே நல்ல பிஸ்கட் விளம்பரம் வைட்டமின் விளம்பரம் ஏதாவது கண்ணில் பட்டால் கடிப்பேன்" என்றார் மூஷிகர். "ஆனால் எனக்கு அவல் பொரியும் ரொம்பப் பிடிக்கும் !"

"நீ வெறும் வாயையே மெல்லுகிறவனாயிற்றே. அவல் கிடைத்தால் விடுவாயா?" என்று கேட்டுச் சிரித்தபடியே அவல் பொரித் தட்டை எலியார் பக்கமாய் நகர்த்தினார், பிள்ளையார். "வேறு என்ன 'அவல்' கிடைத்தது உனக்குப் பத்திரிகையில்?"

"தமிழக முதல்வர் சிறுபான்மையினருக்குப் பாதுகாப்பு அளிக்கப்படும் என்று பேசியிருக்கிறார்."

"சரி, சரி! 'குழந்தையைக் கிள்ளித் தொட்டிலையும் ஆட்டுதல்' என்ற பழமொழி நினைவில் நிலைத்திருக்க ஏதாவது செய்துகொண்டிருக்கிறாராக்கும்" என்றார் கஜவதனர். "அப்புறம்....?"

"ரொம்ப வருத்தத்தக்க விஷயம் மணலி உரத் தொழிற்சாலையில் நடந்துவிட்டது. பொறி இயல் நிபுணர்கள், தொழிலாளர்கள் என்று மொத்தம் ஒன்பது பேர் ஒரு வெடி விபத்தில் மாண்டு போனார்கள்!"

"அடாடா !" என்று வருத்தப்பட்ட விநாயகர் சற்று மௌனமாய் இருந்துவிட்டுச் சொன்னார்: "ஒரு விநோதம் பார்த்தாயா? இந்த இதழ் 'கல்கி' ஆரோக்கியம் அழைக்கிறது பகுதிக்காகத் 'தொழிலாளர் நலமே தொழிலின் நலம்' என்ற தலைப்பில் ஒரு நல்ல கட்டுரையைத் தயாரித்து வைத்திருக்கிறார்கள். அதே சமயத்தில் இந்த விபத்து நேர்ந்திருக்கிறது! தொழிலாளர் நலனை உத்தேசித்துத் தொழிலதிபர்கள் எவ்வளவு முன் ஜாக்கிரதையாகச் செயல்பட்டாலும் போதாது !"

"முன்னெச்சரிக்கையைத் தமிழக விவசாய அமைச்சர் காட்டியிருக்கிறார். உணவுப் பற்றாக்குறைக்கு இடமே இல்லாதபடி உற்பத்தியை இரு மடங்காக்கும் நோக்கில் மரவள்ளிக் கிழங்கு பயிரிடப் போகிறார்களாம். ஐந்து லட்சம் ஏக்கர் தரிசு நிலம் சாகுபடிக்குக் கொண்டு வரப்படுமாம்."

"பயிர் செய்யலாம் ; ஆனால் சாப்பிட ஆள் வேண்டுமே!" என்றார் கஜவதனர். "மக்களின் உணவுப் பழக்கம் மாறுவது என்பது ரொம்பச் சிரமம். அதற்குப் பலமான பிரசாரம் தேவை. செய்வார்கள் என்று எதிர்பார்ப்போம்."

"இனி தமிழ் நாட்டில் உள்ளவர்கள் நல்ல சங்கீதம் கேட்க வேணுமானால் அமெரிக்கா போனால்தான் உண்டு என்கிற நிலைமை சீக்

பாலா நாகராஜன் விநாயக்ராம் நாராயணசாமி கிருஷ்ணன் ரகு.





பிரெய்க்



ஓல்ட்



ஆர்னுர்ட்



டென்னஸ்



எமிஸ்

கிரமே உருவாகிவிடும் போலிருக்கு'' என்றார் மூஞ்சூரார்.

''இதென்ன கூத்து?''

''அந்த அளவுக்குக் கர்நாடக இசையில் அமெரிக்கர்களுக்கு மோகம் வளர்ந்திருக்கு. அமெரிக்கன் ஜொனைட்டி ஃபார் ஈஸ்டர்ன் ஆர்ட்ஸ் என்ற அமைப்பு தமிழகத்திலிருந்து பாலசரஸ்வதி, கே. வி. நாராயணசுவாமி, டி.என். கிருஷ்ணன், பாலக்காடு ரகு, விநாயக்ராம், நாகராஜன் முதலியவர்களை ஒன்றேகால் வருஷம் பெர்க்லியில் வந்திருக்குமாறு கேட்டுக் கொண்டிருக்கிறது. அங்கே அவர்கள் கர்நாடக இசையை மாணவர்களுக்குச் சொல்லியும் தருவார்கள், கச்சேரிகளும் நிகழ்த்துவார்கள்.''

''தமிழ்நாட்டிலிருந்து மட்டும்தானு ? வடக்கேயிருந்தும் நிகில் பானர்ஜி, ஆனந்த் போதாஸ் ஆகியோர் போகிருர்களே! இன்னும் ஜப்பான், சீனு, ஜாவா, பாலி, கொரியா, மேற்கு ஆப்பிரிக்கா, ஐரோப்பா ஆகிய இடங்களிலிருந்தெல்லாம் பலர் செல்கிருர்களே!''

''உங்களுக்குத் தெரியாததா சுவாமி?''

''எதற்குச் சொல்கிறேன், நம்முடைய குபேரன்கூடப் பொருமைப்படக்கூடிய அளவில் செல்வம் கொழிக்கும் நாடு அது. அதனுல் உலகின் பல திசைகளிலிருந்து கலைஞர்களை வரவழைத்து மரியாதை செய்து தாங்களும் பயன் அடைகிருர்கள்.''

''வாஸ்தவம். ஆனுல் ஏழை இந்தியா ஏமாந்து போய்க் கொண்டிருக்கிறது!''

''அடடா, எந்தவிதத்தில்?'' என்று கவலையோடு கேட்டார் சங்கர பாலர்.

''ருஷ்யாவுடனும் இதர கம்யூனிஸ்டு கிழக்கு ஐரோப்பிய நாடுகளுடனும் இந்தியா செய்து வரும் வர்த்தகம் ரூபாய் நாணயக் கணக்கில்தான். எனவே, அந்நியச் செலாவணித் தேவைக்கு இது பயன்படுவதில்லை. ஆனுல் இதே நாடுகள் நாம் ஏற்றுமதி செய்யும் பொருள்களையே வேறு நாடுகளுக்கு அதிக விலையில் மறு ஏற்றுமதி செய்து டாலராகவும் ஸ்டெர்லிங்காகவும் அந்நியச் செலாவணி சம்பாதிக்கின்றனவாம்.''

''ஆக இந்தியாவுக்கு ஏற்றுமதி விலையிலும் நஷ்டம், அந்நியச் செலாவணியும் நஷ்டம் என்று சொல்லு!''

''ஆம், பிரபோ !''

''மூஷிகா! நான் கேட்கிறேன், பாரதத்தில் தேசம் முழுவதும் செல்வாக்குடைய, மக்களை ஒருமுகப்படுத்தி நாட்டின் முன்னேற்றத்துக்கு வழி வகுக்கக்கூடிய ஒரு தலைவர்—இந்திரா காந்தியைவிட இவ்விதத்தில் சிறந்த ஒருவர் — இருக்கிருரா?''

''இல்லை, சுவாமி.''

''அவ்வாறிருக்கும்போது அவர் ஏன் தமக்குள்ள ஒரு நல்ல வாய்ப்பைத் திறம்படப் பயன்படுத்திக் கொள்ள மாட்டேன் என்கிருர் ?''

''சகலமும் அறிந்த தாங்களா இப்படி ஒரு கேள்வியை என்னிடம் கேட்பது? தாங்கள் மனம் வைத்தால்.....''

''கூடவே கூடாது ! அப்புறம் தேவலோக ஆதிக்கம் ஒழிக! பூவுலக சுயாட்சி வேண்டும் என்று கூக்குரல் எழும்! அவரவரும் அனுபவப்பட்டுத் தெரிந்து கொள்ளட்டும், அதுதான் நல்லது !'' என்றார் பகவான்.

ராஜாஜி சிந்தனை

## சுதந்திரப் பொருளாதாரம்

சுதந்திரப் பொருளாதாரம்தான் சரியானது என்பதை மேற்கு ஜெர்மனி நிரூபித்திருக்கிறது. ஒருவனது திறமை, உழைப்பாற்றல் ஆகியவற்றின் நியாயமான பலன்களை அவன் அடைய அனுமதிப்பதுதான் இந்தச் சுதந்திரப் பொருளாதாரத்தின் சாரம். சமூகத்தை அவன் ஏமாற்றிவிடாதிருக்கப் போட்டா போட்டிப் பொருளாதாரம்தான் மிகச் சிறந்த பாதுகாப்பு. லாப நோக்கம்தான் அவனுக்கு ஊக்கமூட்டும் சக்தி.

சுயராஜ்யா, டிசம்பர் 21, 1963



# நம் தருமத்தின் மூல புருஷர்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

(ஜூலை நாலாம் தேதி வியாஸ பூஜை நிகழுவதை முன்னிட்டு, இந்த ஆசாரியப் பெருமானின் இவ்வருள்வாக்கினை வெளியிட்டு ஸ்ரீ வேத வியாஸ மாமுனிவருக்கு நம் அஞ்சலிகளை அர்ப்பணிக்கிறோம்.)

கிராமாந்தரங்களில் முன்னிருட்டு நாட்களில் இருட்டு இருக்கும். இதற்காக ஒரு நாலு பேராவது முன்கூட்டியே ஏற்பாடு செய்து கொண்டு ரோந்து சுற்றுவார்கள். கொஞ்சத்தில் கொஞ்சம் இருட்டுக் குறையும்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா லோகத்தை விட்டுப் போனவுடன் லோகம் முழுவதிலும் கலியின் இருட்டு வீரியத்துடன் பரவக்கூடிய நிலைமை ஏற்பட்டது. வரப்போகிற அதர்ம இருட்டில் வேதம் என்கிற தீபம் சில இடங்களிலாவது அணையாமல் இருக்கச் செய்ய வேண்டுமே என்று ஒரு மகா பெரியவர் விசாரப்பட்டு, அதற்கான காரியங்களில் இறங்கினார். கலிகால மநுஷ்யர்களுக்கு வேதம் முழுவதையும் அத்யயனம் செய்கிற சக்தி இருக்காது என்று அவருக்குத் தெரியும். ஆனாலும் வேத மந்திர சப்தம் லோகத்தில் கொஞ்சம் இருந்தால்தான் சமஸ்தப் பிராணிகளுக்கும் க்ஷேமம் உண்டாகும். கலிகாலத்திலும் கூட தர்ம மார்க்கப்படி இப்படிச் சிறிது க்ஷேமம் எல்லா ஜீவராசிகளுக்கும் கிடைக்கச் செய்ய வேண்டும் என்று அவர் தமது அபார கருணையினால் நினைத்தார். இதற்காகக் கலிகாலத்தில் வரப் போகிற அல்ப சக்தர்களுக்கு ஏற்றபடி, அதுவரை கங்குகரை இல்லாமல் இருந்த வேதத்தை நாலாகப் பிரித்தார். தம் சிஷ்யர்களில் ஸுமந்து என்கிறவருக்கு ரிக்வேதத்தையும், வைசம்பாயனருக்கு யஜுர் வேதத்தையும், ஜைமினிக்கு ஸாம வேதத்தையும், பைலருக்கு அதர்வண வேதத்தையும் உபதேசித்தார். "உங்களிடம் இந்தப் பெரிய சொத்தை ஒப்படைத்தேன். வேதத்தின் இந்த ஒவ்வொரு சாகை (கிளை)யையும் சிஷ்ய பரம்பரை மூலம் ரக்ஷித்து வர ஏற்பாடு பண்ணுங்கள்" என்று அந்த நாலு சிஷ்யர்களை ரோந்து சுற்றுகிற மாதிரி அனுப்பி வைத்தார்.

அந்த சிஷ்யர்கள், அப்புறம் அவர்களுடைய சிஷ்யர்கள், சிஷ்யர்களின் சிஷ்யர்கள் என்று எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக இந்த நாலு வேதங்களும் காதால் கேட்டுக் கேட்டே—'எழுதாக் கிளவி' என்றே தமிழில் சொல்வார்கள் — நம் காலம் வரை வந்துவிட்டது. அதனால் கலியின் கோலாகலமும் அடங்கியே இருந்தது. இப்போது நிலைமை மாறிவிட்டது. அடுத்த தலைமுறைக்கு இந்தப் பரம க்ஷேமகரமான தொடர் சங்கிலி போகாமல் கத்தரித்துவிடுகிற 'பாக்கியம்' நமக்கு ஏற்படும் போலிருக்கிறது.

கலி ஆரம்பத்தில் லோக ரக்ஷணத்துக்காக வேதத்தை இப்படிக் காத்துக் தந்த அந்த மகா பெரியவரைத்தான் 'வேத வியாஸர்' என்கிறோம். 'வியாஸ' என்றால் 'பகுத்து வைப்பது' என்று அர்த்தம். வேதத்தை நாலாகப் பகுத்தவர் வேத வியாஸர்.

அவருடைய இன்னொரு பெயர் பாதராயணர். தீவில் (த்வீபம்) பிறந்ததால் அவருக்கு 'த்வைபாயனர்' என்றும் ஒரு காரணப் பெயர் உண்டு. அவர் சியாமள வர்ணமாதலால் 'கிருஷ்ணர்' என்றும் ஒரு பேர் உண்டு. 'கிருஷ்ண த்வைபாயனர்' என்று சேர்த்தே சொல்வார்கள் — கிருஷ்ண பரமாத்மாவிடமிருந்து வித்தியாசம் தெரிவதற்காக.

வாஸ்தவத்தில் அவரும் கிருஷ்ண பரமாத்மாவும் வேறல்ல. வேத வியாஸர் மகா விஷ்ணுவின் அம்சாவதாரம்தான். பிற்காலத்தில் நம் ஆதி சங்கர பகவத்பாதாளுடைய மகிமையை வெளிப்படுத்துவதற்காக விளையாட்டாக அவரிடம் கோபித்து அவரோடு விவாதச் சண்டை போடுவதற்காகக் கிழப் பிராமணராக வியாஸர் வந்தார். இருவரும் உக்கிரமாக வாதப் பிரதிவாதம் செய்தபோது, ஆசாரியாளின் சிஷ்யர் பத்மபாதருக்கு இரண்டு பேரும் உண்மையில் யார் என்று ஞானதிருஷ்டியால் தெரிந்தது. 'சங்கர: சங்கர: ஸாக்ஷாத் வ்யாஸோ நாராயண: ஸ்வயம்' என்று அவர் சொன்னதாக சுலோகம் இருக்கிறது. ஆசாரியாள் பரமேச்வரன்; வியாஸர் சாக்ஷாத் நாராயணனே.

வியாஸரைவிட நமக்குப் பரம உபகாரம் செய்த இன்னொருவர் இல்லை. வேதங்களை விபாகம் செய்ததோடு அவர் நிற்கவில்லை.





## சாதுர்மாஸ்யத்தில் ஒரு புண்ணியப் பணி

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி புதுப் பெரியவாள் இவ்வருட சாதுர்மாஸ்ய அநுஷ்டானத்தை ஜூலை நாலாம் தேதியிலிருந்து அக்டோபர் 2ந் தேதி வரையில் ஜாம்ஷெட்பூரில் நடத்துகிறார்கள். இச்சந்தர்ப்பத்தை யொட்டி அங்குள்ள ஆஸ்திகப் பொதுமக்கள் ரூ. 80,000 செலவில் ஜூலை 8-லிருந்து 18ந் தேதி வரையில் மகத்தான அதிருத்ர யக்ஞத்தைச் செய்யவிருக்கிறார்கள். ஜாம்ஷெட்பூரில் இவ்வேத விழா ஜாம் ஜாம் என்று நடக்க அன்பர்கள் அடியிற் காணும் முகவரிக்குப் பொருள் அனுப்புமாறு கோரப்படுகிறார்கள்:

Veda Dharma Sastra Paripalana Sabha, Jamshedpur-1 (Bihar)

வேதங்களைச் சிலபேர்தான் ரொம்பவும் நியம ஆசாரங்களோடு ரக்ஷிக்க முடியும். ஆனால் வேதத்தின் தாத்பரியமான அஹிம்ஸை, சத்யம், தர்மம் முதலியவை சகல ஜனங்களுக்கும் தெரிய வேண்டும் என்று மிகுந்த கருணை கொண்டார் வியாஸர். இதற்காகவே வேதத்தில் ஒவ்வோர் இடத்தில் நுணுக்கமாகச் சொல்லியிருக்கிற விஷயங்களை சகல ஜனங்களுக்கும் ரசிக்கிற கதா ரூபத்தில் விளக்கிக் காட்டுவதற்கு — நுண்ணிய வஸ்துவைப் பூதக் கண்ணாடியால் காட்டுகிறது போல் - பதினெட்டுப் புராணங்களையும், ஐந்தாவது வேதம் எனப்படும் மகாபாரதத்தையும் எழுதி அநுக்கிரகம் செய்தார் ஸ்ரீ வியாஸ பகவான். அவரவர்கள் இஷ்ட தேவதையை முழுமுதல் தெய்வமாக ஆராதிப்பதற்குச் சௌகரியமாக விசால மனசு வாய்ந்த வியாஸர் பதினெட்டுப் புராணங்களையும் தந்திருக்கிறார். ஈசுவரன், விஷ்ணு, அம்பாள், சுப்பிரமணியர் என்று ஒவ்வொரு தேவதையைப் பற்றியும் ஒவ்வொரு புராணமாகக் கொடுத்தார். சமீப காலம் வரையில் நம் தேசத்தில் எழுதப் படிக்கத் தெரியாத கிராம ஜனங்கள் கூட பொய், புனைசுருட்டு, திருட்டு, லஞ்சம், நாஸ்திகம் இவற்றுக்குப் பயந்து கூடியவரையில் ஒழுக்கத்தோடு, தெய்வ பக்தியோடு, திருப்தியோடு இருந்து வந்தார்கள் என்றால் அதற்கு முக்கியமான காரணம் வியாஸ பகவானின் பிரசாதமான பாரதமும் புராணங்களும்தான்.

இவ்வளவு செய்ததோடு பரம சத்தியமான பிரம்ம தத்துவத்தை ரத்தினச் சுருக்கமாகச் சொல்கிற பிரம்ம சூத்திரத்தையும் அநுக்கிரகித்தார் ஸ்ரீ வியாஸர். இதனால் பிரம்ம வித்யா ஆசார்யர்களில் ஒருவராகி 'வியாஸாச்சாரியாள்' எனப்படுகிறார். பிரம்ம வித்யையில் அவருக்குச் சிஷ்யர் அவரது புத்திரரான சுகப்பிரம்மம்.

நாலு வேதங்களைப் பரப்பிய சிஷ்யர்கள் பேரை முன்பே சொன்னேன். புராணங்களையும், மகாபாரதத்தையும் அவரிடமிருந்து உபதேசம் பெற்று லோகத்தில் பிரசாரம் பண்ணினவர் ஸூதர் — தேரோட்டி வகுப்பில் பிறந்தவர். மகா பக்திமான், புத்திமான்.

பிரம்மசூத்திரத்துக்குச் சங்கரர் (அத்வைதம்), ராமாநுஜர் (விசிஷ்டாத்வைதம்), மத்வர் (த்வைதம்), ஸ்ரீ கண்டாசாரியர் (சைவ சித்தாந்தம்), வல்லபாசாரியர் (கிருஷ்ணபக்தி மார்க்கம்) எல்லோரும் தத்தம் சித்தாந்தப்படி பாஷ்யம் எழுதியிருக்கிறார்கள். 'பிரம்ம சூத்திரம்' என்றால் பண்டித லோகத்தில் அதற்கு ஒரு தனியான கௌரவம்.

ஹிந்துக்கள் என்று சொல்லிக் கொள்கிற நாம் இந்தச் சித்தாந்தப் பிரிவுகளில் ஒன்றைச் சேர்ந்தவராக இருக்கிறோம். இதனால் 'நாம் பிரிந்தே இருக்கிறோம் என்று அர்த்தமில்லை. மரத்தின் கிளைகள் ஒவ்வொன்றும் ஒரு திசையில்தான் வளர்ந்து கொண்டிருக்கும். அதனால் அவை ஒன்றில்லை என்றாகி விடுமா? அடி மரமும் வேரும் ஒன்றுதானே? அப்படித்தான் நம் இத்தனை பேருக்கும், இத்தனை பிரிவுகளுக்கும் அடிமரமாக, வேராக இருக்கிற மகா புருஷர் வேத வியாஸ மகரிஷி. 'மூலம்' என்றால் வேர். நம் தர்மத்துக்கு மூல புருஷர் வியாஸ பகவான்தான்.

விஷ்ணுவின் அவதாரமான அவரை, நாலு முகமில்லாத பிரம்மா, முக்கண் இல்லாத பரமேசுவரன் என்றெல்லாம் சொல்கிற ச்லோகம் இருக்கிறது. இன்று நாம் இந்த மட்டுமாவது ஆஸ்திக புத்தியோடு க்ஷேமமாக இருப்பதற்குக் காரணம் அன்று வியாஸர் போட்ட விதைதான்.

ஹிந்துவாகப் பிறந்த நாம் ஒவ்வொருவரும் தத்துவத்தில் (பிலாஸபியில்) பிரிந்திருப்பதால் தோஷமில்லை. 'பிலாஸபி'-என்று வருகிறபோது 'நான் அத்வைதி — எனக்குச் சங்கரர்; நீ த்வைதி — உனக்கு மத்வர்' என்று இருந்துவிட்டுப் போவோம். பல அபிப்பிராயங்கள் இருப்பதால், அவற்றை ஆராய்ந்து பார்ப்பதால் தப்பில்லை. எந்தப் பிரிவாயிருந்தாலும் சரி, ஹிந்துவாகப் பிறந்த சகலரும் ஒன்றுசேர்ந்து வேத வியாஸ பகவானின் படத்தைத் தோளில் ஏற்றிக் கொண்டு வீதி பவனி எடுத்து வரக்கடமைப்பட்டிருக்கிறோம். பல பேருக்குச் சிலை வைக்கிறோம். படத் திறப்பு விழாக்கள் செய்கிறோம். எனக்கு ஆசை, வருஷத்துக்கு ஒரு நாளாவது ஒவ்வொரு பேட்டையிலும் இருப்பவர்கள் வியாஸாசாரியாளின் படத்தை ஐக்கியமாக ஊர்வலம் எடுத்து வந்து, ஓரிடத்தில் எழுந்தருளப்பண்ணி, அங்கே சகலருக்கும் பொதுவான வேத தர்மங்களைப் பற்றி சம்மேளனம் நடத்த வேண்டும் என்பது. இதுவரை இப்படிச் செய்யாத அபராதத்துக்குப் பிராயச்சித்தமாகச் சேர்த்து வைத்து இனிமேலாவது இப்படி வியாஸாசாரியாருக்கு உத்ஸவம் செய்ய வேண்டும். நம் எல்லோரின் நமஸ்காரங்களுக்குப் பாத்திரராக, இருக்கிறார் அவர்.

அவர் இன்றைக்கும் சிரஞ்சீவியாக இருக்கிறவர். ஆஞ்சநேயர், அசுவத்தாமா, மகாபலி இவர்கள் மாதிரி இப்போதும் சிரஞ்சீவியாக அநுக்கிரகம் பண்ணி வருகிறார்.



சலனமற்ற நீர்ப்பரப்பு. இலேசான பச்சை நிறம். நின்று பார்த்துக் கொண்டே நாட்களைக் கழித்து விடலாம் போலிருந்தது. அவ்வப்போது இதயத்தைப் பிழிகிற அக்கா குருவியின் கூவலைத் தவிர, எப்போதேனும் இராமத்தின் மறுபுறத்தில் வயல்வெளியில் யாரோ பாடுகிற பாடலின் எதிரொலி தவிர வேறு சத்தமில்லை. எல்லா இயக்கங்களும் ஓய்வெடுத்துக் கொள்கிற பிரமை.

ரங்கநாதன் எந்த விதமான மன ஓட்டமும் இல்லாமல், எதைப் பார்க்கிறோம் என்கிற உணர்வில்லாமல் எதிரே பார்த்துக் கொண்டிருந்தான். இந்த அமைதி அவனுடைய மனத்தை நிறைத்துக் கொண்டிருந்தது. தன்னைப் பற்றிய உணர்வேகூடக் கழன்றுவிட்டதாகத் தோன்றியது. அவன் சாதாரணமாகப் பாடுகிறவனில்லை. பாடுகிற குரலுமில்லை. ஆனால் இப்போது பெருங் குரலெடுத்துப் பாடவேண்டும் போலிருந்தது. அந்த நீர்ப் பரப்பில் தாவிச் செல்கிற பாட்டு. தாவிச் சென்று மறு கரையில் கவிந்திருக்கிற வானத்தில் கரைகிற பாட்டு.

அவன் தன்னையுமறியாமல் உரக்கப் பாடிக் கொண்டிருப்பதை உணர்ந்தான். ஏதோ ஹிந்தி சினிமாப் பாட்டு. ரொம்பப் பழைய பாட்டு. இந்தப் பாட்டு தன் மனத்தடியில் புதைந்திருந்து இந்தக் கணத்தில் வெளியே பிரவகிப்பது அவனுக்கே புரியாத வேடிக்கையாக இருந்தது.

கரையில் கிடந்த பெரிய கற்களில் ஒன்றின்மேல் அமர்ந்தான் ரங்கநாதன். எழத் தொடங்கி யிருந்த சிகப்புச் சூரியனின் ஒளி நீர்ப் பரப்பின் நிறத்தை மாற்றியிருந்தது. சிவப்பாக, தங்க நிறமாக, இடையிடையே நீல ரேகைகளுடன். பட்சிகளின் கூவலும் அதிகரித்தது. கரையிலிருந்த நாவல், ஆல மரங்களிலிருந்து அவை வெளியே பறந்து செல்ல ஆரம்பிக்கிற சிறகுகளின் படபடப்பு.

எல்லாவற்றையும் விட்டுவிட்டு இங்கேயே உட்கார்ந்திருக்க வேண்டும் போலிருந்தது. மெல்ல மெல்ல எழுகிற சூரியனையும், நேரத்துக்கு நேரம் நிறம் மாறுகிற நீர்ப் பரப்பையும், பறந்து பறந்து திரிகிற பறவைகளையும் —அவை எங்கேதான் போய்விட்டு வருகின்றன — பார்த்துக் கொண்டே இருந்துவிடலாமென்ற வேட்கை.

சுவாமிஜி சொல்லி யிருந்தார், அவன் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் அங்கே தங்கியிருக்கலாமென்று. அவனுக்குத் தனியாக ஓர் அறையும் கொடுத்திருந்தார்கள்.

# தாமரை இலையும் தண்ணீர்த் துளியும்!

ம. இராஜாராம்

மடத்தில் ஒரு நேரம்தான் சாப்பாடு. இரவில் கிராமத்துக்குள் போய், அங்கிருந்த ஒரே ஹோட்டலில் கிடைக்கிறதைச் சாப்பிட்டுக் கொண்டான். இல்லாவிட்டால் வெறும் பழங்கள். இங்கு தங்கியிருக்கிற இந்தப் பத்து நாட்களில் இந்தச் சாப்பாட்டைத் தான் வெறுத்தான்.

இங்கு வருவதற்கு முன்பு ஒரு நாள்கூட இரவில் குடிக்காமல் இருந்ததில்லை. இங்கும் இரண்டு பாட்டில்கள் கொண்டு வந்திருந் தான். முதல் நாளிரவு அறைக் கதவைத் தாளிட்டுக் கொண்டு பாட்டிலையும் எடுத்து வைத்துக் கொண்டான். ஆனால் குடிக்க முடியவில்லை. அது அந்தச் சூழ்நிலைக்குக் கொஞ்சமும் பொருந்தாத செயலாகத் தோன்றியது. பாட்டிலை உள்ளே வைத்து விட்டான். சரியாகத் தூக்கம் வராமல் கஷ் டப்பட்டான். இரண்டாம் நாள் பாட்டிலை வெளியே எடுக்க வில்லை. தூங்க முடிய வில்லை. புரண்டு கொண்டே



யிருந்தான். மூன்றும் நாள் பரவாயில்லை. அதன் பிறகு குடிப்பதே மறந்து விட்டாற் போலிருந்தது.

சுபேதார் ராஜா சொல்வான்: இரவில் இருட்டுவதே குடிப்பதற்காகவும் பெண்ணைச் சுகிப்பதற்காகவும்தானும். இவனும் அப்படித்தான் நம்பிக் கொண்டிருந்தான். கூடாரத்தைச் சுற்றிக் குண்டு விழுந்தபோது கூட இவனும் கூட்டாளிகளும் பாட்டில்களை வைத்துக் கொண்டு சீட்டாடிக் கொண்டிருந்தார்கள். ட்ரென்ச்சை நோக்கி ஓடிக்கொண்டிருந்த மேஜர் மாதவன் இவர்களுடைய கூடாரத்துக்குள் எட்டிப் பார்த்து இவர்களிடம் கத்திவிட்டு ஓடினார். இவர்கள், ''எஸ் ஸார், எஸ் ஸார்'.' என்று பரபரப்புடன் எழுந்து போகுமுன்னர் கோப்பையை அவசர விழுங்காகக் காலி செய்யத் தவறவில்லை.

குண்டு சத்தங்களும், மரண ஓலங்களும் அத்தனை சாதாரணமாகிப் போயிருந்தன. எத்தனை சாவைப் பார்த்தாயிற்று! இரத்தமும், அழுகிப்போன பிணங்களும், தலை வேறு கால் வேறாய்ச் சிதைந்து கிடக்கிற முண்டங்களும் தினசரிக் காட்சியாகிப்போன யுத்த காலங்கள்.

பதினேழு வயதில் வீட்டைவிட்டு ஓடிப் போனபோது இதையெல்லாம் எதிர்பார்க்கிற அறிவுகூட வளர்ந்திருக்கவில்லை. எஸ். எஸ். எல்.ஸி.யோடு படிப்பை நிறுத்திவிட்டு நெசவுத் தொழிலில் தனக்கு உதவியாக இருக்கச் சொன்ன தந்தையிடம், கல்லூரியில் படிக்க வேண்டும் என்று சண்டை போட்டான். மறுப்பு எழுந்ததும், வீட்டை விட்டு ஓடிப் போய் வீறுப்பாக ராணுவத்தில் சேர்ந்துவிட்டான்.

சிறுபிள்ளைத்தனம் மாறாமல், இராணுவத்தின் கட்டுப்பாடுகளைப் புரிந்து கொள்ளும் மனப் பக்குவம்கூட இல்லாமல் எத்தனையோ இரவுகள் கண்ணீர் விட்டிருக்கிறான்.

தன்னைவிட மோசமான மன நிலையில் இருந்த சகாக்கள் சிலரைப் பார்த்துத் தன்னை அடக்கிக் கொள்ள முயன்றான் அவன். நோய் வாய்ப்பட்டவர்கள்; வீட்டு நினைவை மறக்க முடியாதவர்கள்; தப்பித்துப் போக முயன்று பிடிபட்டுத் தண்டனை அடைந்தவர்கள்; இடீரென்று காது செவிடாகிவிட்டவர்கள்; பைத்தியம் பிடித்து விட்டவர்கள் போல் நடித்து விடுதலை வாங்கிக் கொள்ள முயன்றவர்கள்; அந்த முயற்சியில் வெற்றியும் பெற்று விட்ட சிலர்.

ரங்கநாதன் ஒரு நாளும் தப்பியோட நினைக்கவில்லை. என்ன செய்கிறோம், இராணுவம் என்பது என்ன என்பதெல்லாம் ஒன்றுமே தெரியாமல்தான் அவன் சேர்ந்திருந்தான். மெல்ல மெல்ல இராணுவத்தின் கட்டுப்பாடுகள், ஒழுங்குகள், இவற்றின் அவசியத்தை அவன் உணர்ந்து கொண்டான். இவற்றில் அவன் மனம் ஊற ஊற, தன்னைப் பற்றிப் பெருமையே கொண்டான். நாட்டைக் காக்கிற பணி தன்னுடையது என்பதை அவன் கிரகித்துக் கொண்டு அந்த நினைப்பில் சிலிர்ப்படைந்தான்.

பயிற்சிக் காலத்தில் நடந்த பரீட்சைகளில் அதிக முயற்சி இல்லாமலேயே நல்ல முறையில் தேறினான். அவனுடைய ஆர்வத்திலிருந்து அவனை மின்சாரப் பகுதிக்குத் தேர்ந்தெடுத்து ரேடாரில் விசேஷப் பயிற்சி கொடுத்தார்கள்.

இராணுவத்தில் சேர்ந்து பல மாதங்களுக்குப்பின் வீட்டுக்குத் தெரியப்படுத்தி எழுதினான். அதைப் பற்றி யாரும் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. இவனுக்கு நினைத்துக் கொள்ளக்கூட யாரும் இல்லாததுபோல் மனத் தொடர்பு விட்டுப் போயிற்று. மூன்று வருஷங்களுக்குப் பிறகு அப்பா இறந்துபோன செய்தி கிடைத்தது. ஊருக்குப் போய்வரலாமா என்று யோசித்தவன், போய் என்ன தான் செய்யப் போகிறோம் என்ற நினைப்பில் போகாமலே இருந்துவிட்டான். இவன் யுத்தத்தில் செத்துப் போயிருப்பான் என்றே ஊரில் எல்லாரும் நினைத்துவிட்டிருப்பார்கள்.

ஒவ்வோர் இடத்துக்கு மாற்றலாகும் போதும் புதுப் புது நண்பர்கள். அங்கிருந்த நாட்கள் வரையிலும் அவர்களே உற்ற நண்பர்கள். குடிக்க, சீட்டு விளையாட, வார இறுதியில் சினிமாவுக்குப் போக, இன்னும் எல்லாவிதமான மற்ற அனுபவங்களையும் பகிர்ந்து கொள்ள நெருங்கிய நண்பர்கள். வேறு இடத்துக்கு மாற்றலானவுடன் இவர்களை மறந்துவிட்டு அங்கிருப்பவர்களை நண்பர்களாக்கிக் கொள்ளப் பழகிக் கொண்டான். போதை மாத்திரையை விழுங்கிவிட்டுச் சினிமாவுக்குப் போய் உட்கார்ந்து மூன்று மணி நேரமும் 'டைட்டில்ஸ்' மட்டுமே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு வந்த ஸ்ரீதரன் நாயர்; பாலத்தில் நின்று கொண்டு, 'நான் நடக்க நடக்கப் பாலமும்கூடவே வருகிறது' என்று பதறிப் போன சாவ்லா; விடாமல் இரண்டு நாட்கள் சிரித்துக் கொண்டேயிருந்து சாகும் நிலைமைக்குப் போன கிருஷ்ணபட்— இப்படிச் சில நண்பர்களை மட்டும் எப்போதும் நினைத்துக் கொண்டேயிருந்தான்.

சமாதான காலங்களில் இப்படி வேடிக்கையும் விளையாட்டுமாக இருந்த இதே நண்பர்கள் போர்க் காலங்களில் எப்படி மாறிப் போனார்கள்! கிருஷ்ண பட் பிடிபடும் நிலைமையிலும் கைக் குண்டுகளை வீசி இரண்டு எதிரிக் கூடாரங்களை வீழ்த்தி விட்டுத் தானும் இறந்தான். சாவ்லா காலில் அடிபட்டுக் கொண்ட நிலைமையிலும், மயங்கி விழுகிற வரை மன உறுதியுடன் ரேடாரை இயக்கிக் கொண்டிருந்தான். பிறகு அவன் கால் துண்டிக்கப்பட்டு இராணுவ ஆஸ்பத்திரியில் கிடந்த போது இவன் போய்ப் பார்த்தான். இவனால் தாங்கவே முடியவில்லை. 'இனிமேல் நான் பாலத்தில் நடந்தால் நிஜமாகவே பாலம் என் கூடவே வரும்!' என்று பெரிதாகச் சிரித்துக் கொண்டு அவன் சொன்ன போது இவன் முகத்தைத் திருப்பிக் கொண்டு அவனுடைய கையைப் பிடித்து மெதுவாக அழுத்திவிட்டு வெளியே வந்து விட்டான்.

ரங்கநாதன் யுத்தத்தில் நேரடியாக ஈடுபடவேண்டியிருக்கவில்லை. ரேடாரில் ஏதேனும் கோளாறு உண்டானால் உடனடியாகச் சரி செய்ய வேண்டியது இவனுடைய பொறுப்பாக வந்தது. சரவணன் இவனைக் கேலி செய்வான்: ''ஒனக்குக் கல்யாணமானு ஓம்

நடிகர்

சிம்மம்!





"இந்தப் படத்தில் நீங்கள் கௌரவ நடிகராக நடித்திருப்பதாகச் சொன்னீர்களே?"

"அதோ பாருங்கள்! வலதுபக்கக் கோடி ஆசாமிக்கு நேர் மேற்கே எட்டாவது நபருக்கு இடது பக்கத்தில் ஒரு கை மட்டும் உயரே தெரிகிறதே, அது என்னுடையதுதான்."

பொண்டாட்டியைப் பத்திக்கூட இப்படித் தெரிஞ்சிக்கிறுவியோ மாட்டியோ, இப்ப ரேடாரோட ஒவ்வொரு பகுதியைப் பத்தியும் தெரிஞ்சு வைச்சிக்கிட்டிருக்கே!'' என்று. இவனுக்கு அத்தனை அத்துபடி.

அவனுக்குச் சாகப் பயமில்லை. 'நான் செத்தாலும் அடையாளம் காட்டக்கூட யாரும் கிடையாது' என்று விட்டேத்தியாக எப்போதும் சொல்லிக் கொள்வான். நாட்டைக் காக்கிற பணியில் உயிரை விட வேண்டும் என்று அவனுக்கு ஒரு உத்வேகம்கூட. ஆனால் அவனைச் சுற்றி நாள்தோறும் வர்ணம் பூசிக் கொண்டிருந்த சோக சித்திரங்கள் அவனுடைய இதயத்தைப் பிழிந்தன. மறு நாள் போர்முனைக்குப் போகவிருந்த முனாளி· இவனிடம் கலக்கத்துடன் சொல்லிக் கொண்டது இவனுக்கு இப்போதும் நினைவுக்கு வந்தது. அவனுக்கு ஒரு மாதம் முன்பு தான் திருமணம் ஆகியிருந்தது. திருமணத்தன்று மாலையிலேயே எதிர்பாராமல் தந்தி வந்து அவன் புறப்பட்டு வந்துவிடவேண்டியிருந்தது. அவன் இவனிடம், ''சமாதான காலத்துலே நம்முடைய சூழ்நிலையின் பாதிப்பினுல் நான் எல்லாத்தையும் அனுபவிச்சாச்சு. ஆனால் மஞ்சு எல்லாத்துக்கும் என்னையே நம்பினவ. என்னை எதிர்பார்த்துக் காத்துக்கிட்டிருப்பா. எங்க முதல் இரவுக்கப்புறம் நான் போர்முனைக்கு வந்து செத்திட்டிருந்தாலும், அனுபவிச்சதை நினைச்சு ஏங்கிப் போயிருப்பா. இப்பவும் என்னன்னு தெரிஞ்சுக்காமலே ஏங்கிப் போவா'' என்று நாத் தழுதழுக்கக் கூறிவிட்டு, ''ரங்கு! இந்த இரண்டு நிலைமையிலே எது பரவாயில்லே?'' என்று கேட்டான். இவன் குழம்பித் தொண்டையடைக்க, ''ஒன்னுமில்லே... போயிட்டு வா. யுத்தம் முடிஞ்ச பிறகு நிச்சயமா லீவு கிடைக்கும். அப்போ ஊருக்குப் போய் ஒம் மஞ்சுகூட எத்தனை நாட்கள் வேணுமானாலும் இருந்துட்டு வரலாம்!'' என்றான். தான் சொல்வதில் தனக்கே நம்பிக்கை இல்லையோ என்றும் பயந்தான்... அடுத்த நாள் போர்முனைக்குப் போன முனாளி பிறகு திரும்பவேயில்லை.

திடீரென்று ஒரு நாள் யுத்தம் நின்றது. எதற்காக ஆரம்பித்தது, ஏன் நின்றது என்பது எதுவும் அறியாமலேயே இவர்களும் 'நின்றது' என்கிற ஒரு செய்தியிலேயே ஆசுவாசம் அடைந்தார்கள். எங்கோ அங்கு மிங்குமாக ஒன்றிரண்டு துப்பாக்கி வேட்டுச் சத்தம் இரண்டு நாட்கள் கேட்டுப் பிறகு எல்லாம் அமைதியாயிற்று. ஐ. நா. சபை குறுக்கிட்டுச் சமாதான ஒப்பந்தம் ஏற்பட்டதாகச் சொன்னார்கள். போர்முனையிலிருந்த பெரும்பாலான வீரர்கள் கூடாரங்களுக்குத் திரும்பி வந்தார்கள். அவர்களையெல்லாம் சேர்த்து வைத்து மேலதிகாரிகள் நீண்ட சொற்பொழிவாற்றினார்கள். வீரச் செயல்களைப் பாராட்டினார்கள். பெரிய விருந்தும், கொண்டாட்டங்களுமாக ஒரே கோலாகலமாக இருந்தது. தாம் அடைந்த வெற்றிகளைப் பற்றி எல்லோரும் பேசிக் கொண்டார்கள்.

ரங்கநாதனும் அவர்களோடு சேர்ந்து கொண்டாடத்தான் செய்தான். ஆனால் அவன் மனம் உள்ளூற அழுது கொண்டேயிருந்தது. இந்த வெற்றிகளுக்குப் பின்னால் எத்தனை உயிர்கள்! எத்தனை மகன்கள், தந்தைகள், கணவர்கள், சகோதரர்கள் மடிந்திருக்கிறார்கள்! இத்தனைக்குப் பின்னரும் நம் வெற்றி என்னவென்று அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்த இழப்புக்களைத் தவிர்த்து முதலிலேயே சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டிருந்திருக்கக் கூடாதா என்று நினைத்துக் கொண்டான். இந்தப் பலப் பரீட்சை பொருளற்ற மாயையாகத் தோன்றியது.

போரைத் தொடர்ந்த மற்ற நடவடிக்கைகள் ஆரம்பமாயின. யுத்தத்தின் சூர வேகத்தில் நிறுத்தியிருந்த சில செப்பனிடும் வேலைகளை அவன் செய்யவேண்டியிருந்தது. அந்த இடத்தில் சீர் செய்ய முடியாத ரேடார்களை இராணுவப் பணிமனைக்குத் திருப்பியனுப்ப வேண்டியிருந்தது. அந்தச் சமயத்தில் ரங்கநாதனை அங்கிருந்து மாற்றி வேறு ஒரு குழுவுடன் வேறிடத்துக்கு அனுப்பினார்கள்.

ரங்கநாதனுக்கு அதிக வேலை இல்லை. ரேடார் ஆப்பரேட்டர்கள் இருவரும் மாற்றி மாற்றி ரேடாரைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். இவன் கூடாரத்துக்கு வெளியே நின்று கொண்டு கிராமத்துக்குள் பார்த்துக் கொண்டிருப்பதில் பெரும் நேரத்தைச் செலவிட்டுக் கொண்டிருந்தான்.

வேலியைத் தாண்டி வருகிறவர்களைத் தண்டிக்க நம் பக்கத்தில் ஓர் உலவும் நீதிமன்றமும் இருந்தது. சாதாரணமாக, காலையில் இருட்டுப் பிரியும் முன்பு இந்தப் பக்கத்தில் சுள்ளி பொறுக்கிப் போவதற்காக வேலியில் நுழைந்து வந்து பிடிபடுகிற பெண்களின் எண்ணிக்கையே அதிகம். ஐந்து நாட்கள் அல்லது ஒரு வாரம் அவர்களுக்குச் சிறைத் தண்டனை கொடுத்து, தண்டனை முடிந்ததும் அவர்களைக் கிராமத்துக்குள் திருப்பி விரட்டி விட்டுவிடுவார்கள்.



"என் எருமைக் கன்றுக் குட்டியைக் காணோம் சார்."

"அடையாளம் சொல்லு."

"இரண்டு கால்கள் மூங்கிலால் ஆனது. இரண்டு கால்கள் சவுக்குக் கள்ளி, வயிற்றுப் பக்கம் இரிசலில் வைக்கோல் வெளியே பிதுங்கி இருக்கும்..."

ரங்கநாதன் இதையெல்லாம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பான். வேலி தாண்டி வந்து பிடிபடும் ஆண்கள் படும் அடி, உதையை அவனால் பார்க்கச் சகிக்காது. அவர்கள் இத்தனையையும் பொறுத்துக் கொண்டு திரும்பத் திரும்ப இந்தப் பக்கம் உணவைத் தேடி வருகிற அளவு வறுமையால் பீடிக்கப்பட்டிருந்தார்கள். சிறைத் தண்டனை காலம் முடியும் வரையிலாவது உணவுக்குப் பஞ்சமில்லை.

ஒரு நாள் 'ஓ'வென்று ஒரு பெண்ணின் குரலைக் கேட்டு ரங்கநாதன் வெளியே வந்து பார்த்தான். இரண்டு ஜவான்களின் பிடியி லிருந்தும் திமிறிக் கொண்டு அவள் பெருங் குரலெடுத்து அழுதவாறு கிராமத்தை நோக் கிக் கையைக் காட்டி ஏதோ கெஞ்சிக் கொண் டிருந்தாள். அவளுடைய மொழி இவர் களுக்குப் புரியவில்லை. அவர்கள் தம் கடமை யில் பரிதாபத்துக்கு இடமில்லை என்கிறமாதிரி யாய் அவளை இழுத்துக் கொண்டு தாற்காலிக மாய் அமைக்கப்பட்டிருந்த சிறைக்கூடத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தார்கள்.

ரங்கநாதன் அவளை அடையாளம் கண்டு கொண்டான். சுமார் ஒரு மாதத்துக்கு முன்பும் இவள் இதே போல் பிடிபட்டிருந் தாள். அவள் பிடிபட்ட இடத்துக்கருகே ரோந்து சுற்றிக் கொண்டிருந்த சிப்பாய் மாணிக்கத்திடம் இவனும் பேசிக் கொண்டு நடந்து கொண்டிருந்தான். அப்போதுதான் ஒளிந்து ஓடப் பார்த்த அவளைக் கண்டு மாணிக்கம் ஓடிச் சென்று பிடித்தான். அவ ளால் ஓட முடியவில்லை. நிறை மாதக் கர்ப் பிணி. அவளை எச்சரித்துத் திருப்பி அனுப்பி விடுமாறு மாணிக்கத்திடம் வேண்டிக் கொண் டான். முதலில் தயங்கிய மாணிக்கம், கர்ப் பிணி என்பதை இவன் சுட்டிக்காட்டியபின் அவளை மிரட்டிக் கிராமத்துக்குள் விரட்டி விட்டான். அவள் வயிற்றைத் தூக்க முடி யாமல் தூக்கிக் கொண்டு வேலியை விலக்கித் தாண்டி அந்தப்புறம் குதித்ததைப் பார்த்துக் கொண்டிருந்த இவனுக்கு வயிற்றில் இனம் காண முடியாத சங்கடம் உண்டாயிற்று.

அவள் இப்போது மறுபடியும் பிடிபட்டிருக் கிறாள். பிரசவம் ஆகிவிட்டதென்று தெரி கிறது. இம்முறை அவளைக் காப்பாற்ற முடி யாது. தப்புவிப்பதும் சரியில்லை என்று தோன்றியது.

பத்து நாட்களுக்குப் பிறகு அவள் விடுதலை பெற்றுக் கிராமத்துக்குள் திரும்பி நுழைந்து விட்டாள். சுமார் அரை மணி நேரத்துக்குப் பிறகு, ரங்கநாதன் ஒரு சிகரெட்டைப் புகைத் துக் கொண்டு மன சூன்யத்துடன் வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கையில்தான் அவள் கிராமத்திலுள்ளிருந்து வேலியை நோக்கிக் கத்தியவாறு ஓடி வருவதை ஒரு திடுக்கிட லுடன் கண்டான். அழுகையும், ஆக்ரோஷமு மாக, தலைவிரி கோலத்துடன் கையில் எதையோ தூக்கிக் கொண்டு ஓடிவந்த அவள் வேலியருகே வந்ததும் நின்றாள். பிறகு தன் கையில் இருந்ததைப் பெரும் வேகத்துடன் இந்தப்புறமாக வீசி எறிந்தாள். அது இவ னுக்குக் கொஞ்ச தூரத்தில் வந்து விழுந்தது. செத்து அழுகி, தாங்க முடியாத நாற்றம் எடுத்துக் கொண்டிருந்த ஒரு பத்து நாள் சிசுவின் பிணம் அது.

இந்த நிகழ்ச்சி அவனைக் கலக்கிவிட்டது. எல்லாமே வெறுத்துப் போயிற்று. பிறகு பொறுக்க முடியாமல் லீவுக்கு விண்ணப் பித்தான். ஒரு மாதம் லீவு கிடைத்தது.

ஆனால் எங்கே போவது ? இந்தக் குழப்பம் உண்டானதும் அவனுக்குச் சிரிப்புத்தான் வந் தது. எந்தவிதத் தீர்மானமும் இல்லாமல், எங்கே போகிறோம் என்றுகூடத் தெரியாதவ னாய்க் கடைசியில் இந்த இடத்துக்கு வந்து சேர்ந்தான்.

இந்தச் சூழ்நிலை அவனைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தேற்றிக் கொண்டிருந்தது. மாலை நேரங்களில் பஜனைகளில் கலந்துகொண் டான். பகலில் பெரும்பாலான நேரத்தை ஏரிக் கரையில் செலவிட்டான். ஆனால் மறு படியும் இரவு நேரங்களில் தானும் தன் நினைவுகளுமாய்த் தனித்திருந்தான். மெல்ல மெல்ல மடத்தின் தலைவரான சுவாமிகளிடம் தன்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டான்.

"சுவாமி! இந்த மனிதர்கள் ஏன் தமக்குள் இப்படிச் சண்டையிட்டுக் கொள்கிறார்கள்?" என்று அவன் கேட்டபோது அவர் என்ன பதில் சொல்லி இவனைத் தேற்றுவது என்று திகைத்தார். "நானும் சாமியாராகி இங் கேயே ஒங்ககூட இருந்துடட்டுமா?" என்று அவன் சிறு குழந்தை போலக் கேட்டபோது அவர் அவனைப் பரிதாபத்துடன் பார்த்தார்.

ரங்கநாதன் கொஞ்சம் கொஞ்சமாகத் தன்னைத் தேற்றிக் கொண்டு, இன்னும் சில நாட்களில் தன் லீவு முடிந்ததும் பழைய வாழ்க்கையைத் தொடர வேண்டும் என்கிற நினைவை ஜீரணிக்க முயன்று கொண்டிருந்த போது, நேற்று கேள்விப்பட்ட ஒரு விஷயம் அவனை நிலைகுலைந்து போக வைத்துவிட்டது.

இந்த மடத்துக்குச் சொந்தமான நிலங் களுக்கு உரிமை கோரி யாரோ வழக்குத் தொடர்ந்திருப்பதாகச் சுவாமிகள் சொன்னார்.

கரையில் அமர்ந்து, தன்னை மறக்கப் பாடாத பாடு பட்டுக் கொண்டிருந்த ரங்கநாதனுக்கு வயிற்றிலிருந்து ஏதோ கிளம்பி உருண்டு தொண்டையை அடைத்துக் கொள்வதுபோல் இருந்தது. எல்லாவற்றையும் துறந்துவிட்டு, குளத்தில் குதித்துவிட வேண்டும் என்ற வெறி உண்டாயிற்று. தனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ என்ற பயம் கலந்த சந்தேகம் அவனைச் சூழ்ந்தது.

# சிவகாமியின் சபதம்

### அத்தியாயம் 49

## காஞ்சியில் கோலாகலம்

ஏறக்குறைய அர்த்த ராத்திரியில் வராக நதிக் கரையிலிருந்து புறப்பட்ட மாமல்லரும் தளபதி பரஞ்சோதியும் காஞ்சிமாநகரை நோக்கி விரைந்து சென்றார்கள். வழியில் இரண்டு காத தூரத்துக்கு ஒன்றாக ஏற்பட்டிருந்த இராஜாங்க விடுதிகளில் அவர்களுக்காக மாற்றுக் குதிரைகள் ஆயத்தமாயிருந்தன. உணவும் சிரமபரிகாரம் செய்துகொள்ள வசதிகளும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. இவ்வளவுடன் ஒவ்வொரு விடுதியிலும், நூறு குதிரை வீரர்கள் அணிவகுத்து ஆயத்தமாக நின்றார்கள். மாமல்லருடன் வந்த வீரர்களை ஆங்காங்கே தங்கி வரும்படி நிறுத்திவிட்டுப் புதிய துணைவீரர்களுடன் செல்வது பிரயாணத்தின் விரைவுக்கு அநுகூலமாயிருந்தது. இந்த முன்னேற்பாடெல்லாம் மாமல்லருக்கு மிக்க வியப்பளித்தது. அதே வழியில் முன்னால் சென்ற தம்





தந்தைதான் அந்த ஏற்பாடுகளெல்லாம் செய்துவிட்டுப் போயிருக்கவேண்டும் என்று ஊகித்து மாமல்லர் அளவற்ற இறும்பூது அடைந்தார். பரஞ்சோதியிடமும் சொல்லிச் சொல்லி மகிழ்ந்தார். அதற்குப் பரஞ்சோதி, ''ஆஹா! இதை ஒரு பிரமாதமாகச் சொல்லப் போகிறீர்களே? சமுத்திரத்தின் ஆழத்தையாவது கண்டு பிடிக்கலாம்; சத்ருமல்லரான மகேந்திரரின் முன் ஜாக்கிரதைக்கு ஆழம் கண்டுபிடிக்க முடியாது. இதையெல்லாம் எட்டு மாதகாலம் அவருடன் கூட இருந்து நேரிலேயே பார்த்தேன். அதனாலேதான் சக்கரவர்த்தி எது சொன்னாலும் அதற்குமாறாக என் மனத்தில் நினைப்பதுகூட இல்லை'' என்றார். வடபெண்ணை யாற்றங்கரையில் பல்லவ சைனியத்தோடு எட்டு மாதங்கள் தங்கி, வாதாபி சைனியத்தை மேலே வரவொட்டாமல் தடுப்பதற்குச் சக்கரவர்த்தி கையாண்ட அதிசயமான யுக்திகளையும் தந்திரங்களையும் பற்றிப் பரஞ்சோதி பிரஸ்தாபித்தார். இது மாமல்லருக்கு அவ்வளவு உற்சாகம் அளிக்கவில்லை.

''தளபதி! நீங்கள் என்னதான் சொல்லுங்கள், எதிராளியை நிறுத்தி வைப்பது, ஏமாற்றுவது, பின்வாங்கித் தப்பித்துக் கொண்டு வருவது — இதிலெல்லாம் ஒருவிதப் பெருமையும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லையே!'' என்றார் மாமல்லர்.

அப்போது பரஞ்சோதி, ''யுத்தத்தில் பின்வாங்க வேண்டிய சமயமும் உண்டு; எதிர்த்துத் தாக்க வேண்டிய சமயமும் உண்டு. ஒன்று கவனித்தீர்களா? துர்விநீதனைத் துரத்திக்கொண்டு தென்பெண்ணைக்கு அப்பால் தாங்கள் போக வேண்டாம் என்று சக்கரவர்த்தி கட்டளையிட்டிருக்கிறார். அதற்காகத் தாங்கள் வருத்தப்பட்டீர்கள். ஆனால், துர்விநீதன் தப்பித்துக் கொண்டு விட்டானா? இல்லையே? சக்கரவர்த்தி அதற்கும் ஏற்பாடு செய்திருந்தார் அல்லவா? தென்பெண்ணைக்கு அக்கரையில் திருக்கோவலூர் கோட்டத் தலைவன் ஆனந்தன் மழவராயனை ஆயத்தமாயிருக்கும்படி செய்திருந்தார் அல்லவா? துர்விநீதன் சமணப் பள்ளியில் ஒளிந்துகொள்ள முயன்றும் தப்ப முடியவில்லையே? இப்போது அவன் மழவராயன் கோட்டையில் சிறைப்பட்டிருக்கிறானல்லவா? பிரபு! பிரம்மாண்ட சைனியங்களை வைத்துக்கொண்டு யுத்தத்தில் ஜயித்தவர்கள் எத்தனையோ பேர் உண்டு. ஆனால், நமது சக்கரவர்த்தியைப் போல் சொற்ப சைனியத்தை வைத்துக்கொண்டு மகத்தான எதிரிகளின்மேல் ஜயம் அடைந்தவர்கள் யாரும் இல்லை!'' என்றார்.

''ஆமாம், அதில் என்ன சந்தேகம்? பல்லவ வீரன் ஒவ்வொருவனும் சளுக்க வீரன் பத்துப் பேருக்கு இணையானவன் அல்லவா? புள்ளலூரிலேதான் பார்த்தோமே?'' என்றார் மாமல்லர்.

மகேந்திர சக்கரவர்த்தி க்ஷத்திரிய வீரத்தைக் கைக்கொள்ளாமல் இராஜ தந்திரத்தைக் கையாண்டு ஜயிக்கிறார் என்ற எண்ணம் குமார சக்கர



வர்த்திக்கு வேம்பா
யிருந்தது. அதை
அவரால் ஒப்புக் கொள்
ளவோ, பாராட்டவோ
முடியவில்லை.

**பா**தி இரவும் ஒருபகலும் அந்தச்
சிநேகிதர்கள் இடைவிடாமல் பிரயாணம்
செய்து சூரியன் அஸ்தமிக்கும் சமயத்தில்
காஞ்சிமாநகரின்தெற்கு வாசலை அணுகினார்கள்.

அதே தெற்குவாசலை, ஒன்பது மாதங்களுக்கு
முன்பு ஒரு நாள் அஸ்தமன நேரத்தில், நாகநந்தி
பிக்ஷுவுடன் கூடத் தான் அணுகியது பரஞ்சோதிக்கு
நினைவு வந்தது. அன்று கோட்டைக் கதவின் உள்
துவாரத்தின் வழியாக நகருக்குள் பரஞ்சோதி பிர
வேசித்தார். இன்றைக்கு அவ்விதம் பிரவேசிக்க
வேண்டியிருக்கவில்லை.



மாமல்லரும் பரஞ்சோதியும் துணையாக வந்த வீரர்களுடன் கோட்டை வாசலை நெருங்கியதும், கோட்டை வாசலின் மேல் மச்சு மண்டபத்தில் ஜய பேரிகைகள் முழங்கின; வெற்றிச் சங்குகள் ஒலித்தன; கொம்புகள் கோஷித்தன. கோட்டைக்கு உட்புறத்திலிருந்து ஓரே கோலாகலச் சத்தம் எழுந்தது.

கோட்டைக் கதவுகள் 'படார்' என்று திறந்தன. உள்ளே பார்த்தால், நகரம் கண்கொள்ளாக் காட்சி அளித்தது. விசாலமான வீதிகளின் நடுவில் கண்ணுக்கெட்டிய தூரம் பல்லவ வீரர்கள் அணிவகுத்து நின்றார்கள். வீதியின் இருபுறங்களிலும் நகர மாந்தர்கள் நெருங்கி நின்றார்கள். இருபுறத்து வீடுகளின் உப்பரிகை மாடங்களில் திவ்யாலங்கார பூஷிதைகளான இளம் பெண்கள் நின்றார்கள். அவர்கள் பக்கத்தில் மல்லிகை முல்லை கொன்றை முதலிய மலர்கள் கும்பல் கும்பலாகக் கிடந்தன. இரண்டு கை நிறையப் புஷ்பங்களை எடுத்து அவர்கள் சித்தமாய் வைத்துக் கொண்டிருந்தார்கள். எதற்காகவென்று சொல்ல வேண்டுமா? வெற்றி வீரராகத் திரும்பி வரும் குமார சக்கரவர்த்தியின் மீது மலர்மாரி பொழிவதற்காகத்தான்.

காஞ்சிமா நகரம் அன்று அப்படிக் கோலாகலமாய் இருந்ததற்குக் காரணங்கள் இரண்டு இருந்தன: முதலாவது, வடக்குப் போர்க்களத்திலிருந்து பல்லவ சைனியம் சேனாதிபதி கலிப்பகையின் தலைமையில் காஞ்சிக்குத் திரும்பி வந்து சேர்ந்திருந்தது. சென்ற சில நாட்களாக ஜனங்கள் நகரைவிட்டுப் போய்க் கொண்டிருந்தபடியால் பாழ் அடைந்ததுபோல் இருந்த நகரம் ஓர் இலட்சம் போர்வீரர்களின் வரவினால் கலகலப்பை அடைந்திருந்தது. அதோடு புள்ளலூர்ச் சண்டையில் மாமல்லரின் மகத்தான வெற்றியைப் பற்றிய செய்தியானது அனைவருக்கும் உற்சாகத்தை உண்டுபண்ணி யிருந்தது. இத்தகைய உற்சாகத்துக்குக் காரணபுருஷரான குமார சக்கரவர்த்தி மாமல்லர் அன்று நகருக்குத் திரும்பி வருகிறார், அவரை நேரிலேயே பார்க்கப் போகிறோம் என்று தெரிந்த பிறகு, மகாஜனங்களின் குதூகலத்துக்குக் கேட்க வேண்டுமா?

**தூ**க்கி நிறுத்தியிருந்த பாலம் அகழியின் மேல் விடப்பட்டதும் மாமல்லர் அதன் வழியாகக் கோட்டைக்குள் பிரவேசித்தார். பரஞ்சோதியும் மற்ற வீரர்களும் அவரைப் பின்தொடர்ந்து சென்றார்கள். திறந்த கோட்டைக் கதவுகள் மறுபடியும் சாத்திக் கொண்டன.

கோட்டை வாசலைத் தாண்டி மாமல்லர் நகர வீதியில் பிரவேசித்ததும், ஏக காலத்தில் ஆயிரக்கணக்கான ரிஷபக் கொடிகள் தெருவெல்லாம் உயர்ந்தன. வீதியில் அணிவகுத்து நின்ற வீரர்கள் அது வரை அக்கொடிகளைத் தாழ்த்திப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். மாமல்லர் உள்ளே பிரவேசித்ததும் கொடிகள் மளமளவென்று உயர்ந்து காற்றில் சடசடவென்று அடித்துக் கொண்ட காட்சி ஏதோ ஓர் இந்திரஜாலக் காட்சி மாதிரி தோன்றியது. அதிலிருந்து குமார சக்கரவர்த்தி நகருக்குள் பிரவேசித்துவிட்டார் என்பதை நெடுந்தூரத்துக்கு நெடுந் தூரம் நெருங்கி நின்ற ஜனத் திரள்கள் தெரிந்து கொண்டன. அவ்வளவு ஜனங்களும் ஒருவரோடொருவர் அந்தச் செய்தியைக் கூறி மகிழ்ந்து கொண்டபோது ஏழு சமுத்திரங்களும் ஒரேயடியாகப் பொங்கி வந்தது போன்ற பேரொலி உண்டாயிற்று.

மாமல்லரை வரவேற்பதற்காகக் கோட்டை வாசலுக்கருகில் அமைச்சர் குழுவினர், மந்திரி மண்டலத்தார் இவர்களுடன் சேனாபதி கலிப்பகையாரும் காத்திருந்தார். மாமல்லரும் பரஞ்சோதியும் குதிரைகள் மீதிருந்து இறங்கினார்கள். தங்க நிறமான கொன்றைப் பூக்களை அழகாகத் தொடுத்

சென்னை: பைலட் A/c., உமா, கமலா

மற்றும் தென்னாடெங்கும்

சங்கீதா பிலிம்ஸ்

# பெண் ஒன்று கண்டேன்

டைரக்ஷன்
கோபு



மௌலி
சாரி
வாலி
M.S. விஸ்வநாதன்
K.S. பாஸ்கர்ராவ்
S. செல்வராஜ்
N.M. சங்கர்
திருச்சி K. அருணாசலம்

ஜெமினி  ரிலீஸ்

திருந்த பெரியதொரு மாலையை மாமல்லரின் கழுத்தில் முதலமைச்சர் சூட்ட சேனாதிபதி கலிப்பகையார், ''வாழ்க! வாழ்க! புள்ளலூர்ப் போர்க்களத்தில் கங்கநாட்டு மன்னனைப் புறங்கண்ட வீராதி வீர மாமல்லர் வாழ்க! வாழ்க!'' என்று கோஷித்ததும், ''வாழ்க! வாழ்க!'', ''ஜய விஜயீபவ!'' என்ற கோஷங்கள் ஆயிரம் பதினாயிரம் கண்டங்களிலிருந்து ஏக காலத்தில் எழுந்து வானளாவி முழங்கின.

இந்த வரவேற்பு வைபவங்களினால் எல்லாம் மாமல்லருடைய முகத்தில் நியாயமாகத் தோன்றியிருக்க வேண்டிய மலர்ச்சி காணப்படவில்லை. அவருடைய உள்ளத்தில் இன்னதென்று தெரியாத ஏதோ ஒரு குறை உறுத்திக் கொண்டிருந்தது. தந்தை மகேந்திர சக்கரவர்த்தி முன்னதாக நகருக்கு வந்து இந்த வரவேற்பு வைபவத்தையெல்லாம் ஏற்பாடு செய்திருக்கிறார் போலும்! பல்லவ இராஜ்யத்தின் மகத்தான எதிரியின் படைகள் காஞ்சியை நெருங்கிக் கொண்டிருக்கும்போது, இந்த வெற்றி முழக்கங்களெல்லாம் எதற்காக?

அந்தக் கணமே தந்தையைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் மாமல்லரின் உள்ளத்தில் பொங்கிற்று. உடனே அவரும் பரஞ்சோதியும் தத்தம் குதிரைகள் மேல் ஏறிக் கொண்டு அரண்மனையை நோக்கி விரைந்து செலுத்தினார்கள்.

அரண்மனையை அடைந்து முன் வாசலையும் நிலா முற்றத்தையும் தாண்டி உள்ளே சென்றதும், அந்தப்புரத்து வாசலில் புவனமகா தேவியார் சேடியர் புடைசூழக் காத்திருப்பதைக் கண்டார். போர்க்களத்திலிருந்து வெற்றி மாலை சூடித் திரும்பி வந்த வீரப் புதல்வனுக்கு அன்னை ஆரத்தியெடுத்து, திருஷ்டி கழித்த பிறகு, ''குழந்தாய்! உன் வீரச் செயல்களைப் பற்றிக் கேட்டு என் தோள்கள் பூரித்திருக்கின்றன. நகர மாந்தர் எல்லாம் சொல்லிமுடியாத ஆனந்தத்தில் மூழ்கியிருக்கிறார்கள். ஆனால், உன் முகம் ஏன் வாடிச் சிணுங்கியிருக்கிறது? நெடுந் தூரம் பிரயாணம் செய்த அலுப்பினாலா?'' என்று சக்கரவர்த்தினி கேட்டாள்.

''ஆம், அம்மா! அதுவும் ஒரு காரணந்தான்: ஆனால், அது மட்டும் அல்ல. இந்த வரவேற்பு வைபவம் ஒன்றும் எனக்குப் பிடிக்கவில்லை. புள்ளலூர்ச் சண்டையில் அடைந்த வெற்றி ஒரு பெரிய வெற்றியா? வாதாபி சைனியம் ஒரு பெரிய சமுத்திரம் என்றால், கங்கர் சைனியம் ஒரு சிறு குட்



டைக்குச் சமானம். அந்தச் சிறு படையை முறியடித்ததற்கும் நானே முழுக் காரணம் அல்ல. புள்ளலூர்ச் சண்டையில் நமது வெற்றிக்குக் காரணமானவர் உண்மையில் என் தந்தைதான்! அது போகட்டும், அம்மா! சக்கரவர்த்தி எங்கே?'' என்று மாமல்லர் கேட்டார். அப்போது புவன மகாதேவியின் முகத்தில் ஆச்சரியக் குறி தென்பட்டது.

''இது என்ன குழந்தாய்? அந்தக் கேள்வியை உன்னிடத்தில் கேட்க வேண்டும் என்றல்லவா நினைத்தேன்? என்னை நீ கேட்கிறாயே? அப்பா எங்கே? நீ பார்க்கவில்லையா? உன்னோடு அவர் வரவில்லையா?'' என்றாள் புவனமகா தேவி.

அப்போதுதான் மகேந்திர சக்கரவர்த்தி காஞ்சிக்கு இன்னும் வந்து சேரவில்லை என்பது மாமல்லருக்குத் தெரிய வந்தது.

தமக்கு முன்னாலேயே புறப்பட்டவர் ஏன் இன்னும் வந்து சேரவில்லை? வழியில் ஏதேனும் அபாயம் நேர்ந்திருக்குமோ! வாதாபிப் படைகள் கோட்டையைச் சூழ்வதற்குள் சக்கரவர்த்தி வந்து சேராவிட்டால் என்ன செய்வது? இராஜ்யப் பொறுப்பும் யுத்தம் நடத்தும் பொறுப்பும் தம்மையல்லவா சாரும்? — இத்தகைய பல எண்ணங்கள் மாமல்லரின் உள்ளத்தில் பொங்கி எழுந்தன.

புவனமகாதேவி கூறிய செய்தியானது மாமல்லருக்கு எவ்வளவு வியப்பை அளித்ததோ, அவ்வளவு பரஞ்சோதிக்கு அளித்ததாகத் தெரியவில்லை. அவர் இதை எதிர்பார்த்ததாகவே தோன்றியது.

## ஐம்பதாம் அத்தியாயம்

# மந்திராலோசனை

அன்றிரவு ஒன்றரை ஜாமம் ஆன போது, மந்திராலோசனை சபை கூடியிருப்பதாகவும், குமார சக்கரவர்த்தியின் வரவை அனைவரும் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாகவும் செய்தி வந்தது. மாமல்லரும் அன்னையிடம் விடைபெற்றுப் புறப்பட்டார்.

புள்ளலூரிலிருந்து சக்கரவர்த்தி செய்தி அனுப்பியதன் காரணமாகத்தான் இன்றிரவும் இந்த மந்திராலோசனை சபை கூடியது. மந்திரிகளும், அமைச்சர்களும், கோட்டத் தலைவர்களும் * மந்திராலோசனைக்கு அழைக்கப்பட்டு வந்திருந்தார்கள்.

தளபதி பரஞ்சோதி பின்தொடர, மாமல்லர் மண்டபத்துக்குள் பிரவேசித்ததும் அங்கே கூடியிருந்தவர் எல்லோரும் எழுந்து நின்று மரியாதை செய்தார்கள். பிறகு பீடங்களில் அமர்ந்தார்கள்.

சக்கரவர்த்தியின் சிம்மாசனம் வெறுமையாயிருந்தது. அதனருகில் போட்டிருந்த மற்றொரு சிம்மாசனத்தில் மாமல்லர் அமர்ந்தார். அவருக்குப் பின்னால் பரஞ்சோதி நின்று கொண்டிருந்தார். அவருக்கு ஏனோ உட்காரவே மனம் வரவில்லை. ஏதோ எதிர்பாராத சம்பவங்கள் நடக்கப் போவதாக அவருடைய உள்ளுணர்ச்சி சொல்லிக் கொண்டிருந்தது. இதனால் ஏற்பட்ட பரபரப்பு அவருடைய முகத்தில் பிரதிபலித்தது.

முதன் மந்திரி சாரங்கதேவ பட்டர் சபையை ஆரம்பித்து வைத்தார். அவர் சபையைப் பார்த்துக் கூறியதாவது:

"இன்றைக்கு இந்த நேரத்தில் மந்திராலோசனை சபை கூட்டும்படியாகச் சக்கரவர்த்தி ஆக்ஞையிட்டதன் பேரில் இங்கே கூடியிருக்கிறோம். ஆனால், சக்கரவர்த்தி இன்னும் வந்து சேரவில்லை. விசித்திர சித்தரான நம் சக்கரவர்த்தி வேறு முக்கிய அலுவல்களில் ஈடுபட்டிருப்பதனால் இன்னும் வந்து சேரவில்லையா? அல்லது எதிர்பாராத இடையூறுகளினால் தடுத்து நிறுத்தப்பட்டாரா என்பதும் தெரியவில்லை. இந்த நிலைமையில் மந்திராலோசனையைத் தள்ளிப் போடுவதா? அல்லது குமார பல்லவரின் தலைமையில் சபையை நடத்துவதா என்பதை முதலில் நீர் மானிக்க வேண்டும். சக்கரவர்த்தி ஒன்பது மாதங்களுக்கு முன்பு வடக்குப் போர்க்களத்துக்குச் சென்ற போது மாமல்லருக்குச் சர்வ இராஜ்ய அதிகாரங்களையும் கொடுத்துவிட்டுச் சென்றார். எனவே, மாமல்லரின் தலைமையில் மந்திராலோசனை நடத்தலாம் என்றே நான் நினைக்கிறேன். உங்கள் எல்லோருடைய அபிப்பிராயமும் அவ்விதமே இருக்கும் என்று கருதுகிறேன்."

முதன் மந்திரியின் மேற்படி பிரேரணையை, "ஆம், ஆம்!" என்று கூறிச் சபையோர் அனைவரும் ஆமோதித்தார்கள்.

பின்னர், முதல் அமைச்சர் ரணதீர பல்லவராயர் சொன்னதாவது: "இந்தச் சபையைத் தள்ளிப் போட்டு, சக்கரவர்த்தி வருகிற வரையில் காத்திருப்பதற்கு முடியாத நிலைமையில் நாம் இருக்கிறோம். வாதாபியின் முன்னணிப் படைகள் கோட்டைக்கு இரண்டு காத தூரத்தில் வந்துவிட்டன. இந்த நிலைமையில் நாம் செய்ய வேண்டியது என்ன என்பதைப் பற்றிக் குமார சக்கரவர்த்தியின் அபிப்பிராயத்தையும் ஆக்ஞையையும் அறிய விரும்புகிறோம். வடக்குப் போர்க்களத்திலிருந்து நம் வீரபல்லவ சைனியத்தைச் சேதமடையாமல் கோட்டைக்குள்ளே கொண்டு வந்து சேர்த்த சேனாதிபதி கலிப்பகை யாரும் நமது கடமையைப் பற்றித் தமது அபிப்பிராயத்தைத் தெரியப்படுத்துவார் என்று எதிர்பார்க்கிறோம்."

செஞ்சிக் கோட்டைத் தலைவன் சடையப்ப சிங்கன் சொன்னான்: "சக்கரவர்த்தியைப் பற்றிய செய்தியை முதலில் தெரிந்துகொள்ள விரும்புகிறோம். வடக்குப் போர்க்களத்தில் தமது சேனாதிபதியுடன் பல்லவேந்திரர் இருப்பதாகவே இத்தனை காலமும் எண்ணிக் கொண்டிருந்தோம். சைனியத்தை விட்டுப் பிரிந்து சக்கரவர்த்தி எங்கே போனார் என்பதைச் சேனாதிபதி தெரிவிக்கக் கூடுமா?"

சேனாதிபதி கலிப்பகையார் கூறினார்: "பத்துத் தினங்களுக்கு முன்னால் சக்கரவர்த்தி இரண்டாயிரம் வீரர்களுடன் வடக்குப் போர்க்களத்திலிருந்து புறப்பட்டார். காஞ்சிக் கோட்டைக்குச் சைனியங்களுடன் வந்து சேரும்படி

* பல்லவ சாம்ராஜ்யத்தில் மந்திரி மண்டலம் என்றும் அமைச்சர் குழு என்றும் இரண்டு சபைகள் சக்கரவர்த்திக்கு இராஜ்ய நிர்வாகக் காரியங்களில் துணை செய்தன. மந்திரிகள் ஆலோசனை சொல்வதற்கு உரியவர்கள். அமைச்சர் அல்லது அமாத்தியர் காரிய நிர்வாகத் தலைவர்கள், சாம்ராஜ்யம் பற்பல கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு கோட்டத்துக்கும் ஒரு தலைவன் உண்டு; நெருக்கடியான சமயங்களில் கோட்டத் தலைவர்களும் மந்திராலோசனைக்கு அழைக்கப்படுவார்கள்.

எனக்குக் கட்டளையிட்டு விட்டுச் சென்றார். அப்புறம் எனக்குத் தகவல் ஒன்றும் தெரியாது. புள்ளலூர்ப் போர்க்களத்துக்குச் செல்வதாக நான் ஊகித்தேன். சக்கரவர்த்தி அழைத்துச் சென்ற வீரர்களில் திரும்பி வந்திருப்பவர்கள் அவ்விதமே சொல்கிறார்கள்.''

''புள்ளலூர்ப் போர்க்களம்'' என்றதும் அங்கிருந்தோர் அனைவருடைய கண்களும் மாமல்லரை நோக்கின. சபையின் நோக்கத்தை அறிந்து கொண்டு மாமல்லர் பேசினார் :

''சேனாதிபதி ஊகித்தது உண்மை. தந்தை புள்ளலூர்ப் போர்க்களத்துக்குத்தான் வந்தார். ஆனால், இன்னும் இங்கு வந்து சேரவில்லை யென்பது எனக்கும் வியப்பாகவே இருக்கிறது. உங்களை யெல்லாம் கோட்டை வாசலில் சந்தித்தபோது, என் தந்தை அரண்மனையில் என்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் என்று எண்ணினேன். அரண்மனைக்கு வந்ததும் பெரும் ஏமாற்றம் அடைந்தேன். என் அருமைத் தோழர் பரஞ்சோதிக்குச் சக்கரவர்த்தி அனுப்பியிருந்த ஓலையிலிருந்து அவ்விதம் நாங்கள் நினைக்க நேர்ந்தது. தளபதி! எல்லா விவரங்களையும் இவர்களுக்குச் சொல்லுங்கள் !''

அவ்விதமே தளபதி பரஞ்சோதி புள்ளலூர்ப் போரின் விவரம், துர்விநீதன் தோற்று ஓடியது, அவனைத் துரத்திக் கொண்டு தாங்கள் சென்றது, சக்கரவர்த்தியும் வேறு மார்க்கமாகத் தெற்கு நோக்கி வந்தது, மாமல்லர் வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு மண்டபப்பட்டுக் கிராமத்தில் ஒதுங்கியது, தாம் அவரைத் தேடியது, துர்விநீதனைச் சக்கரவர்த்தி சிறைப்படுத்திவிட்டுத் தமக்கு ஓலை அனுப்பினது ஆகிய விவரங்களைச் சபையோருக்கு எடுத்துக் கூறினார். ஆயனர் — சிவகாமி விஷயத்தை மட்டும் அவர் பிரஸ்தாபிக்கவில்லை.

அதன் மேல் முதன் மந்திரி சாரங்க தேவபட்டர் கூறியதாவது: ''சக்கரவர்த்தி இல்லாத சமயத்தில் நம்முடைய பொறுப்பு பன்மடங்கு அதிகமாகியிருக்கிறது. தென் தமிழ் நாடு இது வரையில் கண்டிராத பெரிய பகைவர் படை நம்மை நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. இந்த நிலைமையில் நாம் செய்ய வேண்டியதைப் பற்றிக் குமார சக்கரவர்த்தியின் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள விரும்புகிறோம். கோட்டத் தலைவர்களும் மாமல்லரின் ஆக்ஞையை எதிர்பார்க்கிறார்கள். காஞ்சிக் கோட்டை முற்றுகைக்கு உட்படுவதற்குள் அவர்கள் தங்கள் தங்கள் கோட்டத்துக்குத் திரும்பிப் போய்விட வேண்டுமல்லவா ?

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த மாமல்லர் உடனே மறுமொழி எதுவும் சொல்லவில்லை. ஏதோ தீவிரமான சிந்தனையில் ஆழ்ந்தவராகக் காணப்பட்டார்.

அதைக் கவனித்த முதல் அமைச்சர் ரணதீர பல்லவராயர், ''முதலில் வடக்குப் போர்க்களத்திலிருந்து திரும்பி வந்திருக்கும் சேனாதிபதி கலிப்பகையார் தமது அபிப்பிராயத்தைச் சொல்லுவது நல்லது. சக்கரவர்த்தி இந்தச் சபை கூட்டச் சொன்னதன் நோக்கம்



என்ன என்பது அவருக்குத் தெரிந்திருக்கக் கூடும்'' என்றார்.

சேனாதிபதி கலிப்பகையார் தம் ஆசனத்திலிருந்து எழுந்து நின்று சொல்லத் தொடங்கினார்: ''சக்கரவர்த்தி இந்த மந்திராலோசனை சபையைக் கூட்டிய தன் காரணம், காஞ்சி முற்றுகை சம்பந்தமானதுதான். முற்றுகை ஒருவேளை ஓராண்டு காலம் நீடித்தாலும் நீடிக்கலாம் என்று சக்கரவர்த்தி எதிர்பார்க்கிறார். இந்த ஒரு வருஷமும் கோட்டைக்குள்ளே இருப்பவர்களுக்கும் வெளியில் இருப்பவர்களுக்கும் சம்பந்

கல்கி ஆகஸ்ட் 4

34ம் ஆண்டுச் சிறப்பிதழ்

அமரர் கல்கியின் வாழ்க்கை வரலாறு

# பொன்னியின் புதல்வர்

-சுந்தா-



தம் எதுவும் இராது. ஓலைப் போக்கு வரவுக்கும் இடமிராது. காஞ்சிக் கோட்டை முற்றுகைக்கு உட்பட்டிருக்கும் காலத்தில் நம் கோட்டத் தலைவர்கள் செய்ய வேண்டியது என்ன என்பதை அவர்களுக்குச் சக்கரவர்த்தி சொல்ல விரும்பினார். அவர் சொல்ல விரும்பியது என்ன என்பதை நான் அறியேன்.''

''சேனாதிபதியை ஒன்று கேட்க விரும்புகிறேன். வாதாபிப் படைகள் கோட்டை வாசலுக்கு எப்போது வந்து சேரும் என்று நினைக்கிறீர்கள்?'' என்று கோட்டத் தலைவரில் ஒருவர் கேட்டார்.

'' நாளைச் சூரியோதயத்துக்கு வந்து சேரலாம். அஸ்தமனத்துக்குள் கோட்டையை நாற்புறமும் சூழ்ந்து கொள்ளக் கூடும்.''

'' அப்படியானால், கோட்டைக்கு வெளியே போகிறவர்கள் நாளைச் சூரியோதயத்துக்குள் போய்விட வேண்டும் அல்லவா ?''

'' சக்கரவர்த்தி இன்று இரவுக்குள் வந்து சேராவிட்டால், கோட்டத் தலைவர்கள் அவர்களுடைய ஊர்களுக்குத் திரும்பிச் சென்றுவிடுவதுதான் நல்லது. சக்கரவர்த்தியின் ஆக்ஞை அவர்களைத் தேடிக் கொண்டு வந்து சேரும் என்று எதிர்பார்க்கலாம்.''

சற்று நேரம் மௌனம் குடிகொண்டிருந்தது. எல்லாரும் மாமல்லருடைய முகத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தார்கள்.

'' குமார சக்கரவர்த்தியின் ஆக்ஞையை எல்லாரும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம் '' என்று முதல் மந்திரி கூறினார்.

**மா**மல்லர் தமது ஆசனத்திலிருந் கம்பீரமாக எழுந்தார். சபையோ அனைவரையும் ஒரு தடவை பார்த்தார் பிறகு கூறினார்: ''பத்து மாதங்களுக் முன்பு சக்கரவர்த்தி காஞ்சியைவிட்டு புறப்பட்ட போது, தாம் திரும்பி வரு வரை தம்முடைய ஸ்தானத்தில் சக இராஜ்யாதிகாரங்களையும் வகிக்கும்ப எனக்குக் கட்டளையிட்டார். அது உங் ளுக்கெல்லாம் நினைவிருக்கிறதல்லவா?''

''நினைவிருக்கிறது'' என்று சில சொன்னார்கள். இன்னும் சிலர் ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தார்கள்.

ஏதோ விபரீதமான யோசனை வரப் போகிறதென்று எண்ணியவர்களைப் போல் மற்றவர்கள் மௌனமாயிருந்தார்கள்.

''சக்கரவர்த்தி இன்னும் திரும்பி வரவில்லை. ஆகவே, அவர் எனக்கு அளித்த

இராஜ்யாதிகாரத்தை இன்னும் நான் வகிக்கலாமல்லவா? அது உங்களுக்கெல்லாம் சம்மதந்தானே?''

''சம்மதம்! சம்மதம்!'' என்பதாகச் சபையில் பல குரல்கள் ஏககாலத்தில் கோஷித்தன.

முதன் மந்திரி எழுந்து நின்று, ''பல்லவ குமாரா! சக்கரவர்த்தி எங்களை ஆலோசனை கேட்கும்போது நாங்கள் எங்கள் கருத்தைச் சொல்வோம். அது போலவே தாங்கள் கேட்டாலும் எங்கள் அபிப்பிராயத்தைச் சொல்கிறோம். தீர ஆலோசித்தபின் தாங்கள் எப்படிக் கட்டளையிடுகிறீர்களோ, அப்படியே நடத்தி வைப்போம். யோசனை சொல்லுவதற்குத்தான் எங்களுக்கு உரிமை; ஆக்ஞை இடும் உரிமை தங்களது'' என்றார்.

'' சந்தோஷம். நீங்கள் சொல்ல வேண்டிய யோசனையெல்லாம் சொல்லுங்கள்; கேட்டுக் கொள்கிறேன். ஆனால், என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி நான் முன்னமே முடிவு செய்துவிட்டேன். மந்திரிகளே! அமைச்சர்களே! கோட்டத் தலைவர்களே! அனைவரும் கேளுங்கள். படையெடுத்து வந்த பகைவர்களுக்குப் பயந்து கோட்டைக்குள் ஒளிந்து கொள்வது என்பது பல்லவ குலத்துக்கு என்றும் அழியாத அவமானத்தை உண்டுபண்ணக்கூடியது. தொண்டைமான் இளந்திரையன் வழி வந்த வீர பல்லவ வம்சத்துக்கு இந்த மகத்தான களங்கம் என்னுடைய காலத்தில் ஏற்படுவதை நான் ஒரு நாளும் சகிக்க முடியாது. இந்தக் கோட்டைக்குள் இன்று சுமார் ஓர் இலட்சம் பல்லவ வீரர்கள் போருக்குத் துடிதுடித்துக் கொண்டு காத்திருக்கிறார்கள். அவர்களை அழைத்துக் கொண்டு நாளைக்கே வெளியேறி நமது கோட்டை வாசலில் வாதாபி சைனியத்தைத் தாக்குவது என்று முடிவு செய்துவிட்டேன். அதற்கு உங்களுடைய சம்மதத்தை எதிர்பார்க்கிறேன். தளபதி பரஞ்சோதி என்னுடன் போர்க்களத்துக்கு வருவார். பரஞ்சோதிக்குப் பதிலாகச் சேனாபதி கலிப்பகையாரைக் கோட்டைக் காவலுக்கு நியமிக்கிறேன். இதற்கு உங்களுடைய சம்மதம் தெரிந்து கொண்ட பிறகு, வெளியூர்க் கோட்டத் தலைவர்களுக்கு நான் சொல்ல விரும்புவதைச் சொல்கிறேன்.''

மாமல்லர் பேச்சை நிறுத்தியபோது இடிஇடித்து ஓய்ந்தது போல் இருந்தது. மந்திரிகளும் அமைச்சர்களும் ஒருவரது முகத்தை ஒருவர் பார்த்தார்கள். யாருக்கும் பேச நா எழவில்லை.

(தொடரும்)



எழுபத்தொன்பதாவது பிறந்தநாளின் போது திரு க. சந்தானம். இடமிருந்து வலமாக மைத்துனி ருக்மிணி அம்மாள், பேத்தி ஜோதி, பேத்தி பானு, நாட்டுப் பெண் விமலா.

# எண்பதாண்டு எழுத்தாளர்

**'நடமாடும் என்சைக்ளோபீடியா' என்று ராஜாஜி அவர்களால் வர்ணிக்கப்பட்டவர் திரு கே. சந்தானம். சுதந்திரப் போராட்ட வீரர்; காந்தியச் செம்மல். சுதந்திர பாரதத்தில் மத்திய அரசில் மந்திரியாகவும் பிறகு கவர்னராகவும் பதவிகள் வகித்தவர். நிர்வாக ஆற்றல் மிக்கவர். பத்திரிகை உலகிலும், பொது வாழ்விலும் உன்னத ஸ்தானம் வகிக்கும் திரு கே. சந்தானத்தை 'ஸ்வராஜ்யா' ஆசிரியராக அடையும் பாக்கியம் பெற்றது இந்த ஸ்தாபனம். அவருக்கு ஜூலை 12ந் தேதி எண்பதாண்டு பிறக்கிறது. சுதந்திரச் சிந்தனையாளரும் ஆங்கிலத்திலும் தமிழிலும் அரிய பல நூல்களை எழுதியவருமான இந்த எண்பதாண்டு எழுத்தாளருக்குப் பல்லாண்டு கூறி வாழ்த்துவோம்.**

**— ஆசிரியர்**

ஆபட்ஸ்பரி கல்யாண மண்டபம். அருமைப் பேத்தி ஜோதிக்கு, ராகவன் மூன்று முடிச்சுப் போடும் நேரத்தை வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார், திரு சந்தானம். ஒவ்வொரு கணமும் அவர் உடல் உபாதையினால் அவஸ்தைப் பட்டாலும் அதை வெளிக்குக் காட்டாமல் தம் அருமைப் பேத்தியின் திருமணத்தை நடத்துவதிலேயே ஒரே குறியாக இருந்தார்.

**அருமைப் பேத்தி ஜோதி சொல்கிறாள்:** எங்க தாத்தா இந்தக் கோடையில் கோடைக்கானலுக்கு ஓய்வுக்காகப் போயிருந்தார். அங்கே குளியலறையில் தடுக்கி விழுந்து விட்டார். அதிலிருந்து நரம்புப் பிடிப்பினால் வயிற்று உபாதை. ஒரே அவஸ்தை அவருக்கு. விழுந்த நேரத்திலும், 'பகவானே! என் பேத்தியின் கல்யாணம் நிச்சயம் பண்ணி வைச்சிருக்கு. என்னாலே ஒரு குந்தகமும் வந்துவிடப்படாது' என்று வேண்டிக்கொண்டாராம். ராகவன் என் கழுத்திலே 'மூன்று முடிச்சு' போட்டதைப் பார்த்துத் தாத்தாவுக்கு உடல் வேதனையிலும் ஒரே குதூகலம். கல்யாணம் முடியும்வரை வேதனையை வெளிக் காட்டிக் கொள்ளவேயில்லை அவர். வலின்னு தெரிஞ்சா கல்யாணத்தைப் பார்க்க விடாமே அப்பாவும் அம்மாவும் அவரை ஆஸ்பத்திரியிலே கொண்டு தள்ளிடுவாங்களோன்னு பயம்! இப்போ ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வரும் தாத்தாவைப் பார்க்கப் போயிருந்தேன். 'உன்னைப் போன்ற மலர்ந்த முகங்களைப் பார்த்தாலே என் வியாதி சீக்கிரம் குணமாகிடும்'னு சொன்னார். அவரது வாஞ்சை என் கண்ணிலே ஆனந்தக் கண்ணீரையே வரவழைச்சுடுத்து! அமெரிக்காவிலே இருக்கும் என் கணவரைச் சென்றடைய முடியாமல் 'விஸா' தொல்லை. இதுபற்றி அப்பாவைத் தொந்தரவுபடுத்துவதோடு சரி, தாத்தா காதிலே போடவில்லை. நான் கண் கலங்குவதைத் தாத்தா காண விரும்ப மாட்டார்!

**ஜோதியின் தங்கை பானு:** காலேஜுக்குத் தான் நான் ஸ்கூட்டரில் போவேன் என்றில்லை. நான் தாத்தாவைப் பல நாட்கள் ஸ்கூட்டரிலே அழைத்துக் கொண்டு கடற்கரைக்குப் போயிருக்கேன். அப்பா ஊரில் இல்லாத போது இந்தப் பொறுப்பு எனக்கு வரும். அதிலே அலாதி ஆனந்தம். அவரோடு பல விஷயங்களைப் பற்றிப் பேசி அரட்டை





யடிப்பேன்! பொறுமையா என் கேள்விக்கெல்லாம் அவர் பதிலளிப்பார். கோபம் தலைகாட்டாது! அவருக்கு வயசானாலும் மனம் இளமை வேகத்துடன் இயங்குகிறது.

**மருமகள் விமலா:** எங்க மாமனாருக்கு சம்ஸ்கிருதத்திலும், தமிழிலும், ஆங்கிலத்திலும் பாண்டித்தியம் நிறைய உண்டு. என் நாத்தனாருக்கு சம்ஸ்கிருதம் கற்றுத் தந்தது அவர்தான். யார் கேட்டாலும் மகிழ்ச்சியோடு விஷயங்கள் புரிகிறவரைக்கும் அவர் விடாமல் விளக்குவதைப் பல நாள் கண்ணால் கண்டிருக்கிறேன். திருவாய்மொழி ஒவ்வொரு நாளும் சொல்லும்படி கேட்பார். அப்படி விடாமல் சொன்னதற்குப் பரிசாக ஈடு வியாக்கியானங்களை எடுத்துக் கொடுத்துப் படிக்கச் சொன்னதும் நினைவிருக்கு. கல்யாணமான புதிதில் ராமாயண சுலோகங்களைப் படிக்கச் சொல்லுவார். ஒவ்வொரு சுலோகத்துக்கும் அவரே விளக்கமும் அர்த்தமும் சொல்லி, ராமாயணத்திலே ஆசையைத் தூண்டியிருக்கார். அவருக்குப் பிரயாணமென்றால் கொள்ளை ஆசை. குடும்பத்தோடு அவர் பத்திகாசிரமத்தில் கழித்த நாட்கள் இன்னும் மறக்கலே. எங்களோடு அவரும் போட்டி போட்டுக் கொண்டு பல மைல்கள் நடந்து வந்தது நினைவிருக்கிறது. அவர் உடம்பு சரியானதும் எங்களோடு ஹரித்துவார் போகணும்னு சொல்லியிருக்கார். அந்த நாளை நாங்கள் ஆவலோடு எதிர்பார்த்துண்டிருக்கோம்!

**மகன் கே. எஸ். ராமானுஜம்:** என் தந்தை காலை நாலு மணிக்கு எழுந்து விடுவார். உபநிஷதம், ராமாயணம் ஆகியவற்றைப் படிப்பார். ஐந்து மணிக்குக் காப்பி அருந்தியதும் 'வாக்கிங்' புறப்பட்டு விடுவார். வீட்டிலிருந்து காந்தி சிலைவரை நடந்து செல்வார். நான் ஊரில் உள்ள நாட்களில் பீச்சில் காந்தி சிலையிலிருந்து அவரைக் காரில் வீட்டுக்கு அழைத்துச் சென்று விட்டுப் பிறகு அவர் வீட்டில் கொண்டு விடுவேன். பல நாட்கள் அவர் பல்லவன் போக்குவரத்து பஸ்ஸிலேயே வீட்டுக்குப் போய் விடுவார். அவர் வாழ்க்கையில் முதல் ஆசை கணக்கு. மாமேதை ராமானுஜத்திடம் அளவற்ற ஈடுபாடு. எம். ஏ. பட்டப் படிப்பில் கணக்கில் சர்வகலாசாலையில் இரண்டாவது இடம் பெற்றார். அந்தக் காலத்தில் முதல் இடம் பெற்றவருக்கே கணக்கு ஆராய்ச்சியில் மேல் படிப்புக்கு இடம் கிடைத்தது. சட்டத் துறையில் புகுந்து பட்டம் பெற்றாலும் இன்றும் என் அப்பாவுக்குப் பல கணக்கு 'ப்ராப்ளம்'களைப் போட்டுப் பார்ப்பதில் ஆசை உண்டு. கணக்குக்கு அடுத்தபடியாக அவர் உள்ளம் கவர்ந்தது செஸ் விளையாட்டு. எனது இளைய சகோதரன் 'பாபு'வை நாங்க இழந்தபோது அவர் ஒரு புதல்வனையும் செஸ் பார்ட்னரையும் ஒருங்கே இழந்து விட்டார்.''

''அவரது அரசியல் வாழ்வில் மறக்க முடியாத நிகழ்ச்சி ஒன்றைச் சொல்கிறீர்களா?''

''ஒன்று என்ன, எவ்வளவோ சொல்லலாம். 1930ம் வருஷம். என் தந்தை உப்பு சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டுச் சிறைவாசத் தண்டனை அனுபவித்துக் கொண்டிருந்தார். அப்போது என் அருமை அன்னை இறந்து விட்டார். பரோலில் விடுதலையாகிச் சென்று வருமாறு பல நண்பர்கள் வற்புறுத்தினார்கள். என் தந்தை அசையவில்லை. 1932ம் வருஷம் தமது அருமைச் சகோதரரை இழந்தார். அப்பொழுதும் தேச விடுதலைப் பணியிலிருந்து விலகிக் குடும்பத் துன்பத்தில் பங்குபெற விரும்பாதவராக இருந்தது மறக்க முடியாத நிகழ்ச்சி.

''1952 தேர்தல். என் தந்தைக்காக மாயவரம் தொகுதியில் பணியாற்றினேன். என் தந்தை தோல்வியுற்ற செய்தி நடு இரவில் கிடைத்து என்னை அயர வைத்து விட்டது. மனம் கலங்கிப் போய்த் தந்தைக்கு 'போன்' செய்தேன். அவர் என்ன சொன்னார் தெரியுமா? 'ஜனநாயகத்தில் இப்படி மாறுதல் ஏற்படுவது சகஜம். நீயும் நமக்காக உழைத்தவர்களும் மனமுடைந்து போக வேண்டாம். இந்தக் கசப்பான அநுபவத்தை மறந்து விடுங்கள்!' என்றார். உடனே ராஜினாமாக் கடிதத்தை நேருஜிக்கு அனுப்பி விட்டார் தந்தை. ஆனால் நிர்வாகத் திறமையுள்ள என் தந்தையை நேருஜியும், என். ஜி. அய்யங்காரும் விட்டுவிடப் பிரியப்படவில்லை. விந்தியப் பிரதேச 'லெப்டினன்ட் கவர்னராக ஆக்கினார்கள். என் தந்தையார் எந்தப் பதவியில் இருந்தாலும் அவரது குறிக்கோள்: 'சிவப்பு நாடாவை ஒழிக்கவேண்டும். இருபத்தி நாலு மணி நேரத்துக்கு மேல் எவரிடமும் ஒரு 'பைல்' தங்கக் கூடாது' என்பது தான்! அவரது நிர்வாக வெற்றிக்கு இதுவும் ஒரு காரணம். மத்திய — ராஜ்ய உறவுகளுக்கு என் தந்தையின் ஆலோசனைகளை அறிஞர் அண்ணா கேட்டது என் மனத்தில் பசுமையாக நினைவி க்கு!''

பேட்டி: **பி. எஸ். மணி**



ஆரோக்கியம் அழைக்கிறது

# தொழிலாளர் நலமே தொழிலின் நலம்

செய்யும் வேலைக்கும் ஆரோக்கியத்துக்கும் தொடர்புண்டு. சில சமயம் பணியைப் பொறுத்து உடல் நலம் பாதிக்கப்படுகிறது; உடல், பணிக்கு ஏற்பத் தன்னை அனுசரித்துக் கொள்வதும் உண்டு. ஏற்ற பணி சிறக்க, உழைப்பவர் உடல் நலம் சிறந்து விளங்க வேண்டும். 'தொழிலில் உடல் நலம்' என்பது ஓர் இயக்கமாகவே எல்லா நாடுகளிலும் இன்று பரவி வருகிறது.

தொழிற்சாலை என்று தனியே போவானேன்? வீடும் ஒரு தொழில் அகம்தான். இங்கே இல்லத்தரசியின் உயரத்துக்கு ஏற்பச் சமையல் மேடை அமையாவிடில் முதுகு வலிப் பிரச்னை எழுகிறது; விபத்து நேர வாய்ப்பாகிறது. அவசரத்தில் 'பிடி-துணி'க்குப் பதில் சேலை முந்தானையைக் கொண்டு அடுப்பிலிருந்து சூடான பால் பாத்திரத்தை எடுக்கும் ஒவ்வொரு முறையும் ஒரு கண்டம் தான். அதுவும் நைலக்ஸ் புடவையானால் கேட்கவே வேண்டாம்!

குழந்தை படிக்கும்போது வெளிச்சம் போதிய அளவு இராவிட்டாலும் வேதனை. கண் கூசும் அளவு மிகையானாலும் சங்கடம். விரைவில் களைத்துப் போகும். காற்றோட்டமும் மிக அவசியம்.

ஆசனம் தாழ்வாக இருந்தால் எம்பி எம்பிப் பார்க்க வேண்டிய காரோட்டிக்கு எவ்வளவு கஷ்டம்?

பணி புரிய ஏற்ற சூழ்நிலை அமைந்தால் செய்யும் தொழில் சிறக்கும், இல்லையேல் குன்றும். இந்த அடிப்படையைக் கவனித்தே தொழிற்சாலைகள் நிர்மாணிக்கப்படுகின்றன. இயந்திரங்களின் வடிவ அமைப்பும் நிர்மாணிக்கப்படுகின்றன. ஊழியர்களின் உடலில் ஊனமோ ஆரோக்கியக் குறைவோ ஏற்படாதிருக்க எச்சரிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன.

எந்தத் தொழிலில் ஈடுபட்டவருக்கும் ஏதாவது ஒரு 'தொழில் இடர்' நேரத்தான் செய்கிறது. இவற்றுள் சாதாரணமான இடர் களைப்பு. அவரவர் தொழிலின் விவரங்களை ஆராய்ந்து பார்த்தால் களைப்புக்குக் காரணங்களை அறிந்து, ஓரளவு களையலாம். நாற்காலியின் வடிவமோ உயரமோ கூட நல்ல உழைப்பாளிகள் விரைவில் களைத்துப் போகக் காரணமாக இருக்கலாம். உடலுறுப்புக்கள் சில நீண்ட நேர உழைப்பால் பாதிக்கப்படுகின்றன. சத்தம் மிகுந்த ஆலை இயந்திரத்தின் அருகில் பணி புரிபவர் காதும், பொடி அச்சு எழுத்துப் பிழை பார்ப்பவர் கண்ணும் மீனவர் சருமமும் சில ஆண்டு உழைப்பில் பாதிக்கப்படுவதைப் பார்க்கிறோம்.

இதற்கெல்லாம் தக்க பாதுகாப்புக்களை மேற்கொள்ள வேண்டும்.

உதாரணமாக, காகிதம் வெட்டும் கா- வியோ, பொருள்களின் உருவ அச்சு...



செய்யும் தொழிலின் காரணமாக உடல் நலம் கெடுவது ஒருபுறமிருக்க நகர்ப்புறங்களில் உருவாகும் ஏராளமான தொழிற்சாலைகள் காரணமாகச் சுற்றுப் புறச் சூழ்நிலை பாதிக்கப்பட்டு அதனால் பொது மக்களின் ஆரோக்கியம் சீர்கெடுகிறது. தொழில் யுகத்தின் இந்த மாபெரும் பிரச்னையுடன் ஒரு போராட்டம் இன்று தொடங்கியிருக்கிறது.



சர்ச்சிலின் பேரன் சர்ச்சில் தாத்தாவைப் பற்றிப் பேட்டி காண்பவரிடம் பேசுகிறார். சர்ச்சிலின் நூற்றாண்டுவிழா தற்போது பிரிட்டனில் கொண்டாடப்படுகிறது. லண்டனில் சர்ச்சில் கண்காட்சியும் நடக்கிறது. கண்காட்சி வாசலில் தாத்தாவின் சிலைக்குக் கீழே பேரன். இவரும் பாராளு மன்ற உறுப்பினர். ▼



▲ 'அர்பத்நாட் பாங்க்' என்ற அந்நிய பாங்க் மூழ்கி, இந்தியர் பணத்தை இங்கிலாந்துக்குக் கொண்டு செல்லத் திட்டமிட்டபோது அதை எதிர்த்து வாதாடி வெற்றி கண்டவர் திரு வி. கிருஷ்ணசாமி அய்யர். இந்தியர்களுக்காக இந்தியர்களே ஒரு தேசிய பாங்க் நடத்தவேண்டும் என்று உறுதி கொண்டார். இந்தியன் பாங்க் 1907ல் ஆரம்பிக்கப்பட்டது.

இந்தியன் பாங்க் ஊழியர்கள் சங்கத்துக்கு இந்த ஆண்டு வெள்ளி விழா. தொழிலாளர் நல உறவு மந்திரி திரு கே. ராஜாராம் விழாவினைத் தொடங்கி வைத்தார். அகில இந்திய வங்கி ஊழியர் சங்கத்தின் பொதுக் காரியதரிசி திரு பிரபாதகர் முக்கிய விருந்தாளியாக வந்திருந்தார். இந்தியன் பாங்க் ஊழியர் சங்கத்தின் தலைவர் ராம. வெள்ளையன் தலைமையில் மகாநாடு மிகச் சிறப்பாக நடைபெற்றது. இச்சங்கம் வெள்ளி விழா ஆண்டில் அங்கத்தினர்களுக்கு இரு நல்வாழ்வுத் திட்டங்களை அமுல்படுத்தவிருக்கிறது. சென்னையில் ஒரு சுற்றுலா மாளிகையை நிறுவவும் பாங்க் ஊழியர் மரணமடையும்போது அவருடைய ஓய்வு கால ஊதியங்கள் கிடைக்கும்வரையில் அவர் குடும்பத்துக்குத் தாத்காலிகப் பொருளாதார உதவி அளிக்கவும் முடிவு செய்திருக்கிறது.

---

கும் அழுத்தக் கருவியோ, சற்று ஏமாந்தால் அவற்றில் பணிபுரியும் தொழிலாளர் கைகளை நசுக்கித் துண்டித்துவிடும். அதனால்தான் அவற்றில் கரம் சிக்கிக் கொள்ளாதபடி தடுப்புக் கம்பி பொருத்தப்பட்டிருக்கும். சில நவீனக் கருவிகள் இயங்கும் போது இடையே மனிதக் கரம் வர நேர்ந்தால் கருவி இயங்குவது தானே நின்றுவிடும்.

சுரங்கத் தொழிலாளிகள் தூசியிலும் கனிப் பொருள்களிலும் மணிக் கணக்கில் உழைக்க வேண்டியிருக்கிறது. பல கனிச் சுரங்கங்களில் வேலை நேரத்தில் நிறைய நீர் தெளித்துத் தூசியை அடக்கிக் கட்டுப்படுத்திவிடுகிறார்கள். விஷ வாயு நெடியில் பணி புரிவோருக்குப் பாதுகாப்பு முகமூடி; நல்ல மூச்சுக் காற்றுக்கு வழி செய்தல். உலோகப் பற்றவைப்பு போன்ற பணிகளில் ஈடுபட்டுள்ளவர்கள் தீச்சிதறல்களிலிருந்து கண்களைப் பாதுகாத்துக் கொள்ளக் கண்ணாடி அணிய வேண்டும். ரசாயன ஆலைகளில் ஈடுபட்டோரின் உடல் ரப்பர் உறையால் காக்கப்படுகிறது.

உடல் நலம் குறைந்தால் உற்பத்தித் தரம் குறையும்; உற்பத்தித் தரம் குறைந்தால் பொருளாதார நஷ்டம் ஒருபுறம், தரமான ஊழியரின் உழைப்பு நேர நஷ்டம் ஒருபுறம். மொத்தத்தில் நாட்டுக்குப் பெரும் நஷ்டம்!

சுமார் இருபத்தைந்து ஆண்டுகளாக நமது நாட்டு மருத்துவர்கள் தொழிற்சாலை ஊழியர்களின் உடல் நல ஆராய்ச்சியில் ஈடுபட்டுப் பல சாதனைகளைப் புரிந்துள்ளார்கள். 'எஃகு நகரம்' என்று புகழ் பெற்ற ஜாம்ஷெட்பூரில் மூன்று டாக்டர்கள் தொடங்கிய இந்த முயற்சி இன்று இந்திய தொழிலாளர் உடல் நலச் சங்கம் (இந்தியன் அசோசியேஷன் ஆஃப் ஆக்குபேஷனல் ஹெல்த்) என்று ஸ்தாபன ரீதியில் அமைக்கப்பட்டுள்ளது. நாட்டின் பல பிராந்தியங்களிலும் கிளைச் சங்கங்கள் நிறுவி ஆங்காங்குள்ள தொழிற்சாலைகளைச் சேர்ந்த டாக்டர்கள் தமது அநுபவ அறிவை ஆராய்ச்சிக்குப் பயன்படுத்தி உதவுகிறார்கள். தவிர, வேறு பல நிறுவனங்களும் தொழிலாளர் உடல் நலனுக்கும் செய்யும் வேலைக்கும் உள்ள தொடர்புகளை ஆராய்ந்து யோசனைகள் கூறுகின்றன. ஆனாலும் இந்த 'ப்ரக்ஞை' பல காரணங்களால் பூரணமாகப் பரவவில்லை.

ஆயிரக் கணக்கான தொழிலாளர் தினம் பற்பல மருத்துவ மனைகளில் சிகிச்சை பெறுகிறார்கள். தொழிலாளர்களுக்கென்றே அரசு நிறுவியுள்ள ஈ. எஸ். ஐ. மருத்துவ மனைகளில் கூட நோய்க்குச் சிகிச்சை அளிக்கப்படுகிறதே தவிர, நோயாளியின் வேலைச் சூழ்நிலையை உணர்ந்து அதற்கு ஏற்ற சிகிச்சை அளிக்கப்படுகிறது என்று சொல்ல முடியாது.

டாக்டர்களும் தமது நோயாளிகளின் வேலைச் சூழ்நிலைகளை அறிந்து, சிகிச்சை அளிக்க வேண்டும்; ஊழியர்களும் செய்யும் வேலைக்கு ஏற்ப ஆரோக்கிய விதி முறைகளைக் கேட்டறிந்து கடைப்பிடிக்க வேண்டும். இவ்வாறு செய்தால் உற்பத்திப் பெருக்கத்துக்குப் பேருதவி புரிந்தவர்கள் ஆவோம்.

ஆலோசனை: டாக்டர் P. B. சதாசிவம்
கட்டுரை: தம்பி சீனிவாசன்

# நான் அவனில்லை

தன் மீது சுமத்தப்பட்ட ஒவ்வொரு குற்றத்தையும் மறுத்து "நான் அவனில்லை" யென்று கூறி நீதி மன்றத்தையே திணற அடித்த அவன் கதை சுவையானது தான்!

ஜெமினி கணேசனின் சொந்தப் படம். ஒன்பது விதமான பாத்திரங்களை ஏற்று அற்புதமாக நடித்திருக்கிறார்! பல்வேறு மொழிகளில் பேசியிருக்கிறார். நல்லவனைத்தான் கதையின் நாயகனாகக் கொள்ள வேண்டும் என்பது நியதியில்லை. மோசக்காரனை, பொல்லாதவனைக்கூடக் கதாநாயகனாக வைத்து எழுத முடியும். அந்த விதமான புது முறைக் கதை படமாகியிருக்கிறது. ஒன்பது விதமான மோசக்காரனாக நடிக்கும் ஜெமினி கணேசனுக்கு ஒன்பது கதாநாயகிகள்! மகாராஷ்டிரத்தில் நிகழ்ந்த ஓர் உண்மை நிகழ்ச்சியை அவர்கள் நாடகமாக நடத்தி வந்திருக்கின்றனர். அதைத் தமிழ்ப் படத்துக்கு ஏற்ற விதத்தில் அமைத்துப் பொருத்தமான வசனங்கள் எழுதி, அருமையாக டைரக்ட் செய்திருக்கிறார் டைரக்டர் கே. பாலசந்தர். Flash back என்ற திரைப்பட உத்தியைத் தக்க முறையில் சிறிதும் குழப்பம் இல்லாமல் படம் முழுவதும் பயன்படுத்திப் படம் மிகவும் சிறப்பாகத் தயாரிக்கப் பட்டிருக்கிறது. லக்ஷ்மி, ராஜசுலோசனா, ஜெயபாரதி, ஜெயசுதா, பி. ஆர். வரலக்ஷ்மி முதலிய நடிகைகள் மிகச் சிறப்பாக நடித்திருக்கின்றனர். பல குற்றங்கள் புரிந்து நீதி மன்றத்தில் விசாரணைக்குட்பட்டு நிற்கும் குற்றவாளியிடம், ஸலிமா கொண்டது அன்பா, அனுதாபமா, வியப்பா, மதிப்பா, காதலா— என்னவென்று தெளிவாய்ச் சொல்ல முடியாவிட்டாலும் அவளது உள்ளக் கிளர்ச்சியை அதியற்புதமாக வெளிப்படுத்துகிறார் லக்ஷ்மி. நீதிபதி பூர்ணம் விசுவநாதன் பதவிக்கு ஏற்றவர். ராஜசுலோசனா நீண்ட நாட்களுக்குப் பின் திரையில் தோன்றி மன நெகிழ்வைத் தருகிறார். பி. ஆர். வரலக்ஷ்மியும், ஜெயபாரதியும் மோசக்காரனால் கைவிடப்பட்ட பெண்மணிகள் — முதலில் சண்டை போட்டுக் கொண்டாலும், பின்னால் தாங்கள் இருவரும் நம்பிக்கைத் துரோகம் செய்யப்பட்டதை யறிந்து, ஒற்றுமையானது ரஸமானது. ஜெயசுதா கவர்ச்சியைக் காட்டியிருப்பதோடு கண்ணீர் விட்டுக் கண் கலங்கியும் இருக்கிறார். நல்ல நடிப்பு.

ஒலிப் பதிவு சிறப்பாக இருக்கிறது. நான்கு பாடல்களும் வேதனை அளிக்கவில்லை. அடுத்தடுத்து கோர்ட்டு சீன்கள் வந்தும் படம் அலுப்புத் தட்டவில்லை.

முற்றிலும் புதிய பாணியில் சுவை குன்றாமல் தயாரிக்கப்பட்டிருக்கும் படம் "நான் அவனில்லை."

—காந்தன்





# ஜி.எம்.மின்

ராகவண்ணா அந்தக் கம்பெனியின் ஜெனரல் மானேஜராக நியமிக்கப்பட்டு, சென்னைக்கு மாற்றலாகி வந்ததுமே, பவானியின் அந்தஸ்து ஒரு படி உயர்ந்து விட்டது.

ராகவன் பவானியின் தமையன். (சொந்தத் தமையனல்ல; மூத்தாள் — இளையாள் குழந்தைகள்) ராகவன் சின்னஞ் சிறு வயதிலேயே — படிக்கும் போதே — பெற்றோரை விட்டுப் பிரிந்து பம்பாய்க்கு வேலை தேடிச் சென்றான். கிடைத்த வேலை ஒன்றில் தொற்றிக் கொண்டு அதிலிருந்தபடியே பரீட்சைகள் எல்லாம் பாஸ் செய்து, கம்பெனியின் முக்கியமான ஸ்தானத்தை எட்டிப் பிடித்துவிட்டான். ''ராகவண்ணா பம்பாயில் வேலையில் இருக்கிறான்'' என்று தன் சிநேகிதிகளிடமும், மற்ற உறவினர்களிடமும் பவானி சொல்வது உண்டு. ஆனால் இத்தனை செல்வாக்கும் புகழும் உள்ளவன் என்பது இங்கு மாற்றலாகி வந்தவுடன்தானே தெரிந்தது !

இரண்டு மாதங்களுக்கு முன்புதான் எழுதியிருந்தான். '' நான் அடுத்த வாரம் வரேன், பவானி. நல்ல வீடாகப் பாரேன் — எழும்பூரிலேயே, உன்னோட ஏரியாவிலே!'' என்று.

பவானிக்குச் சந்தோஷம்தான். ஆனால் கூடவே ஒரு கவலை. அண்ணி எப்படியிருப்பாளோ, எவ்விதம் பழகுவாளோ என்ற கூச்சம் இருக்கத்தான் இருந்தது. ஏனெனில், இத்தனை நாள் வரை, ராகவனும் பவானியும் தூரத்துப் பச்சையும் கண்ணுக்குக் குளிர்ச்சியுமாக இருந்தனர். இப்போது ஒரே ஊரிலேயே, அதுவும் பக்கத்திலேயே குடிவந்தால்!

ஆனால் அண்ணி அவ்விதம் இருக்கவில்லை. ஒட்டி ஒட்டி உறவாடினாள். மேலும், பவானியின் பிள்ளையும், ராகவனின் பிள்ளையும் சம வயதினராக அமைந்தது ஒரு சகஜ பாவத்தை ஏற்படுத்தித் தந்தது. ஜி. எம். என்ற முறையில் ராகவன் அவள் வீட்டுக்கு வந்த அன்று, அடேயப்பா எத்தனை பேர் கூட வந்தார்கள்!

''இவர் என்னோட பெர்சனல் செக்ரட்டரி சுந்தரம். இவர் பி. ஆர். ஓ. ஸ்ரீராம்....இவர் என் ஆபீஸ் மானேஜர் வின்சென்ட்'' என்று மடமடவென்று தம் கூட வந்தவர்களை அறிமுகப்படுத்தியதும், பவானிக்குத் தலைச் சுற்றல்தான் வந்தது. ஆனாலும் பெருமையாகவும் இருந்தது.

''பவானி, உன்னிடம் சொன்னேனில்லையா வீடு பார்க்கச் சொல்லி? அதற்குள் சுந்தரம் எனக்கு வேறே வீடு பார்த்துவிட்டான், நந்தனத்திலே !''

''ஆமாம், சார். என்ன இருந்தாலும் ஜி. எம்.மின் அந்தஸ்துக்கு ஏற்ற மாதிரி இருக்க வேண்டாமா? எழுநூறு ரூபாய் வாடகை ரொம்ப சீப் !''

பவானி புன்னகை செய்தாள். அதோடு இது நான் அனுபவித்தறியாத ஒரு புது பயம் தோன்றியது. பழைய ராகவண்ணாவாக இல்லையே ! புராதன காலத்து வீட்டிலிருந்து கொண்டு, வாடகைக்காக மேலே கட்டலாமா என்று யோசிக்கும் நான் எங்கே ! எழுநூறு ரூபாய் வாடகையைத் துச்சமாக வீசி எறியும் கம்பெனியின் ஜி. எம். எங்கே!

துரைசாமி — பவானியின் கணவர் — அப்போது உள்ளே வந்தார். ''எப்போ ஊரிலிருந்து வந்தே?'' என்று கேட்டார் ராகவனிடம்.

''நேற்றுத்தான் வந்தேன். சௌக்கியமா?'' என்று குசலம் விசாரித்தான். சில நிமிடங்கள்

பொறுத்து. "மாடி கட்டப் போகிறீர்களாமே! இப்பத்தான் கேள்விப்பட்டேன்" என்றான்.

"யோசனைதான். ஆனால் சிமெண்ட், இரும்பு இதையெல்லாம் நினைச்சால் கவலையா இருக்கு!"

"ஓ! இட்ஸ் நத்திங்!" என்று அலட்சியமாகத் தோளைக்* குலுக்கினான் ராகவன். "எங்க ஆபீஸ் மானேஜர் வின்சென்ட் இருக்கிறார்; என்ன வேணுமானாலும் ஏற்பாடு பண்ணறேன்!"

பேச்சு இப்படியே வளர்ந்து கொண்டே போயிற்று. தனக்குத் திகைப்பாயும், மலைப்பாகவும் தோன்றும் காரியங்களெல்லாம் ராகவனுக்கு எத்தனை அற்பமாகப்படுகின்றன என்பதை எண்ணும்போது பவானிக்குப் பிரமிப்பு ஏற்பட்டது.

"வரேன்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான் ராகவன். தொடர்ந்து மற்றவர்களும் சென்றனர்.

அவன் தலை மறைந்ததுமே தன் கணவனிடம், "என்ன சொல்கிறீர்கள்? ராகவனுதான் நல்ல பதவியிலே இருக்கிறானே? அவன் கம்பெனியில் இஞ்சினியரிங் டிவிஷன்கூட இருக்கலாம். வீடு கட்டச் சிரமமே இருக்காது!" என்றாள்.

"பார்க்கலாம்!" என்று அவள் உற்சாகத்துக்கு முற்றுப்புள்ளி வைத்தார் துரைசாமி.

அந்த நாளிலிருந்து—ராகவன் சென்னையில் ஜி.எம்.மாகப் பொறுப்பேற்றுக் குடித்தனம் வைத்த நாளிலிருந்து — பவானிக்கு எல்லாம் கலபமாயிற்று.

மாடியில் சின்னதாக இடம் கட்டலாம் என்றுதான் நினைத்திருந்தாள் பவானி; ஆனால் ராகவனுடைய மூலம் கிடைத்த 'வசதி'யில் கொஞ்சம் பெரிதாகவே வளர்ந்தது. பவானிக்கு ரொம்பப் பெருமையாகவே இருந்தது.

பவானிக்கு ஒரு பெண்ணும், ஒரு பிள்ளையும் இருந்தார்கள். பெண் மூத்தவள். பிள்ளை பி.யு.சி. படித்து முடித்து, மேலே தொடர இடம் கிடைக்காமல் திண்டாடிக்கொண்டிருந்தான்.

"என்ன பவானி! உன் பிள்ளை சுகுமார் என்ன செய்கிறான்?" என்று கேட்டான் ராகவன்.

"சுகுமார்தான் பி.யு.சி. தேர்ட் கிளாஸில் பாஸ் பண்ணியிருக்கிறானே! காலேஜில் இடம் கிடைக்கலே. ஷார்ட்ஹாண்ட் டைப்ரைட்டிங்..." என்று சொல்லிக் கொண்டிருக்கையிலேயே ராகவன் குறுக்கிட்டான்:

"வாட் ஈஸ் இட்! உனக்கு எந்தக் காலேஜில் இடம் வேணும் சொல்லு!"

"அரவிந்தா காலேஜ்தான் கிட்டே."

"அட! எங்க டைரக்டரோட தம்பிதான் அந்தக் காலேஜில் கமிட்டி அங்கத்தினர். நான் சொல்லி ஏற்பாடு பண்ணறேன்!"



ரொம்பச் சிரமம் என்று நினைத்திருந்த காரியம் வெகு எளிதில் நிறைவேறி விட்டது.

"ரொம்பத் தாங்ஸ் அண்ணா!" என்று சொல்லிச் சந்தோஷப்பட்டாள் பவானி.

நாள் ஆக ஆக, ராகவனின் வீட்டுக்குச் சுவாதீனமாகப் போய்ப் பழகி வந்தாள், பவானி. அது போல் பழகியதால், கம்பெனி முக்கியஸ்தர்களுக்கெல்லாம் பவானியைத் தெரிந்துவிட்டது. "ஜி. எம். மின் சகோதரி" என்று மரியாதை கொடுத்து வந்தார்கள். எங்காவது அவசரமாகப் போக வேண்டியிருந்தால், கம்பெனிக்குப் போன் செய்தால், போதும். ஏதாவது ஒரு காரை பி. ஏ. சுந்தரம் அனுப்பி விடுவார். திருப்பதி போய் வர வேண்டும் என்று ரொம்ப நாளாக அவளுக்கு ஆசை இருந்தது. பேச்சுவாக்கில் ஒரு தடவை சொன்னவுடன், அதைச் சீரியஸாக எடுத்துக்கொண்டு, போக வர வாகன வசதி, தரிசனத்

# தங்கை

◦ தமயந்தி ◦



காட்டுமிராண்டிகள் அடங்கிய தீவில் தங்கத்தைத் தேடி மூன்று கப்பல் வெங்காயத்துடன் பயணமானார் ஓர் அமெரிக்கர். வெங்காயச் சமையலினால் காட்டுமிராண்டிகளை மயக்கி, 'இந்த அற்புதக் கறியை உங்கள் பரிசாகக் கொண்டு செல்கிறேன்' என்று ஏராளத் தங்கத்துடன் திரும்பினார். இப்படி ஏராளமான தங்கத்துடன் அமெரிக்கர் திரும்பியதைக் கண்டு மற்றொரு அமெரிக்கர் பூண்டுகள் அடங்கிய கப்பலுடன் அந்தத் தீவுக்குச் சென்றார்! அவர் தயாரித்த பூண்டுப் பணியாரத்துக்குப் பரிசாக அந்தக் காட்டுமிராண்டிகள், 'ஒரு முட்டாள் இங்குள்ள கறியைப் பரிசாகப் பெற்றுச் சென்றான். ஆனால் உங்களுக்கு விலையுயர்ந்த பரிசே தரப் போகிறோம்!' என்று கூறி முதல் அமெரிக்கர் கொண்டு வந்த வெங்காயத்தையே இந்த அமெரிக்கருக்குப் பரிசாகக் கப்பலில் ஏற்றி அனுப்பி விட்டார்கள்! -சாமா

துக்கு ஏற்பாடு எல்லாம் செய்துவிட்டார் காரியதரிசி சுந்தரம். ஆரம்பத்தில், சலுகைகளை அனுபவிக்கப் பவானி சிறிது தயக்கப்பட்டாலும், போகப் போக உரிமையுடன் ஏற்றுக் கொள்ளலானாள். "கொஞ்சம் லிமிட்டாகவே இரு!" என்று கணவன் சொல்வதைக்கூட, அவள் பொருட்படுத்தவில்லை. பெண்ணின் கல்யாணத்துக்குக்கூட ராகவனின் கம்பெனியை எதிர்பார்த்தாளே, பவானி!

ராகவண்ணா சொன்னபடி, நிறைய ஜாதகங்கள் கிடைத்தன — அந்தரங்கக் காரியதரிசி சுந்தரம் மூலமாக. எல்லா வரன்களும் ஒன்று அந்தக் கம்பெனியில் வேலை பார்த்துவந்தார்கள்; அல்லது கம்பெனியில் வேலை பார்ப்பவர்களுக்கு நெருங்கிய உறவினர்களாக இருந்தார்கள். துரைசாமிக்கு இது அவ்வளவாகப் பிடிக்கவில்லை.

பவானி கணவன் பேச்சைக் காதில் போட்டுக் கொள்ளாது தானாகவே முனைந்து பார்த்து வந்தாள். எல்லாவற்றுக்கும் அந்தரங்கக் காரியதரிசி சுந்தரத்தின் உதவியைத்தான் நாடினாள். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அந்த அதிர்ச்சியான — சந்தோஷமான — செய்தி கிடைத்தது.

ராகவண்ணா லண்டன் போகப் போகிறான். அவன் திறமையைப் புரிந்து கொண்டு, இரண்டாண்டு காலம் அனுப்பும்படி, லண்டனிலுள்ள நிர்வாகம் கேட்டுக் கொண்டதற்கிணங்க, அவன் கிளம்பப் போகிறான்.

"கவலைப்படாதே. நான் சுந்தரத்திடம், உன் பெண்ணுக்கு நல்ல வரனாகப் பார்க்கச் சொல்லியிருக்கிறேன். கல்யாணம் நிச்சயமானதும் லெட்டர் போடு. பிளேனில் வந்து விடுகிறேன்" என்றான் ராகவன்.

ராகவண்ணா போய்ப் பல நாட்கள் கை ஒடிந்த மாதிரி இருந்தது பவானிக்கு. அண்ணியும், குழந்தைகளும்கூடக் கல்கத்தா (அதுதான் அண்ணியின் பிறந்தகம்) சென்று விட்டதால் இன்னும் சூனியமாக இருந்தது.

பெண் கல்யாணத்தைப் பற்றிச் சுந்தரத்திடம், ராகவண்ணா சொல்லியிருப்பது அவளுக்கு ஞாபகம் இருந்தது. ஓரிரு வரன்கள் பொருந்தியிருந்தன. இரண்டு பேருமே மவுண்ட்ரோட்டில்தான் வேலை பார்த்து வந்தார்கள். விசாரிக்கலாம் என்று சுந்தரத்தைப் பார்க்கச் சென்றாள் பவானி.

தடதடவென்று பவானி உள்ளே நுழைந்ததை, சுந்தரம் எதிர்பார்க்கவில்லை போலும். "ஓ, நீங்களா!" என்றார் பவானியை நோக்கி.

"அந்த வரன் உங்க மவுண்ட்ரோட் ஆபிசில்தான் வேலை பார்க்கிறான் — பொருந்தியிருக்கிறது. மேலே விசாரித்துவிட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன்!" என்று நேரே விஷயத்துக்கு வந்தாள் பவானி.

"ஓ! அந்தப் பையனா!" — சுந்தரம் அலட்சியமாகப் புகையை ஊதினார். "அவனுக்குக் கல்யாணம் நிச்சயமாகி விட்டதே!"

பவானிக்கு என்னவோபோல் இருந்தது. திடீரென்று தான் முற்றிலும் அந்நியமான சூழ்நிலையில் அமர்ந்திருப்பது போல் பட்டது. 'சட், எல்லாம் பிரமை! எத்தனை தடவை சுந்தரம் தன் வீட்டுக்கு வந்திருக்கிறார்' என்று தன்னையே கேட்டுக் கொண்டாள். "ஜி.எம்.மின் தங்கை!" என்று சுவாதீனத்துடன் குறிப்பிடுவது காதில் ஒலிக்கிறதே!

மேலே என்ன பேசுவது என்று பவானிக்குத் தெரியவில்லை. மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

போன் கிணுகிணுத்தது. சுந்தரம் எடுத்துப் பேசினார். "ஹலோ! வெங்கியா! குட்மார்னிங். நேற்று அந்தக் காக்டெய்ல் பார்ட்டிக்கு வர முடியலே. நம்ம ஏ.ஜி.எம். மோட தம்பி வீடு கட்டறானாம். அதைப் பார்க்கப் போயிருந்தேனா? அப்படியே அவரோட பேசிக் கொண்டிருந்துவிட்டேன்!"

ரத்தமெல்லாம் வடிந்துவிட்டாற்போன்ற உணர்ச்சி பவானிக்கு உண்டாயிற்று. சுந்தரம் தற்செயலாகத்தான் பேசினாரா அல்லது தன் மனத்தில் உறைக்கத்தான் அதுபோல் பேசினாரா? 'இப்போ ஏ.ஜி.எம்தான் எங்க ஜி. எம். உங்க பெண் கல்யாணத்தைப் பற்றியெல்லாம் சொல்லி ஏன் என்னைத் தொந்தரவு படுத்துகிறீர்கள்!' என்று சொல்லாமல் சொல்லிவிட்டாரே! திடீரென்று பவானிக்கு எல்லாம் புரிந்தது. இதுகாறும் அவர்கள் கொடுத்து வந்த மரியாதை; உபசரிப்பு; மதிப்பு — எல்லாம் ஜி.எம்.முக்குத்தான். ஜி.எம்.மின் தங்கை என்பதற்குத்தான். இப்போது அந்தப் பதவியில் வேறொருத்தர் இங்கு இருப்பதனால் அவரைத் திருப்தி செய்ய வேண்டியதுதான் சுந்தரத்தின் முதல் கடமை. ராகவண்ணாவின் தங்கையைப் பற்றியோ, பவானியின் பெண் கல்யாணத்தைப் பற்றியோ அவருக்கு என்ன கவலை?

டெலிபோனை வைத்துவிட்டு, சிகரெட்டை ஊதியபடியே சுந்தரம் நிமிர்ந்து பார்த்தபோது, பவானிக்கு அவமானமாக இருந்தது. "நான் வரேன்" என்று சொல்லிவிட்டு மடமடவென்று வெளியேறினாள்.

"உங்கள் விருப்பப்படியே சாருவுக்கு மெள்ள வரன் பாருங்கள்" என்று பவானி அன்றிரவு சொன்னபோது, துரைசாமிக்கு ஆச்சரியமாயிருந்தது.



# 15% வரை வட்டி

ஒவ்வொரு வீட்டிற்கும் அத்தியாவசியம் சேமிப்பு. அதை லாபகரமாக்குகிறது எங்கள் ஸ்தாபனம்.

வட்டி விகிதம்

| | |
|---|---|
| 7 நாள் தவணை | 7.5% |
| 15 நாள் தவணை | 8.5% |
| 3 மாத பிக்ஸெட் டெபாசிட் | 10.5% |
| 6 ,, ,, | 12.0% |
| 12 ,, ,, | 13.5% |
| 24 ,, ,, | 14.0% |
| 36 ,, ,, | 14.5% |

கல்வி மற்றும் தர்மஸ்தாபனங்களுக்கு விசேஷ சலுகை உண்டு. பெண்களுக்கு 2 வருஷத்துக்கு மேற்பட்ட முதலீட்டுக்கு ½% வட்டி அதிகம்.

சிறுதுளி பெருவெள்ளம்
எங்கள் சிறு சேமிப்புத் திட்டத்தில் சேர்ந்து உங்கள் வீட்டில் வைக்கப்படும் உண்டியலில் பிரதி தினமும் சிறுசிறு தொகைகளாகச் சேர்த்து முதலீடு செய்யுங்கள். அது கணிசமான தொகையாக மாறுவதைக் கண்டு இன்புறுங்கள்.



விபரங்களுக்கு அணுகவும் போன்: 811013

## ஸமரியாஸ் பைனன்ஸஸ்

1/22, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-600005

IONS-SF-5

## கூந்தல் வளம்

### கேட்லாக் இலவசம்

கூந்தல் கொட்டுதல், ஆரம்ப வழுக்கை, தலையில் அரிப்பு, ஊரல், பொடுகு, ஆரம்ப நரை, தலையில் புழுவெட்டால் ஏற்படும் சொட்டை ஆகியவைகளை வென்று பூரண குணம் பெற்று அழகிய அடர்த்தியான கூந்தலைப்பெற,

| | |
|---|---|
| 1. மயிர் வளர் தைலம் | ரூ. 16-00 |
| 2. மயிர் கறு தைலம் | ரூ. 18-00 |
| 3. இலகர்நி ரசாயனம் | ரூ. 16-00 |
| 4. புழுவெட்டு சொட்டை நிவாரண R. கிரீம் | ரூ. 10.00 |

தபால் செலவு தனி

**தமிழ் சித்தர் நிலையம்**

போன்: ஆர். 801

வெங்கடேசா காலனி

பொள்ளாச்சி (S. I.) PIN: 642001



திண்டுக்கல் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்', தினமணி, கல்கி ஏஜண்டும், திருபருமான திரு ஏ. சுவாமிநாதன் குமாரத்தி சௌ. கீதா B.A. க்கும், சிரஞ்சீவி K.S. ராமன் B. Com., C.A.I.I.B. (ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா, தளிபிரம்பா) ?க்கும் சமீபத்தில் திண்டுக்கல்லில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

# மின்சார நெருக்கடியை மிகச் சிறந்த முறையில் சமாளிக்கிறது பிலிப்ஸ்.



அரைப்பங்கு
மின்சாரச்
சிலவில்
இருபங்கு
ஒளி!

தற்கால மின்சார நெருக்கடியை எளிதில் சமாளியுங்கள். பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்தி மின்சாரத்தை மிச்சப்படுத்துங்கள்.

ஒளித்துறையில் உன்னதமான சாதனைகள் புரியும் பிலிப்ஸ் அளிக்கும் ஸ்ட்ரிப்லைட், தரத்தோடு உழைப்பிற்கும் பெரிதும் நம்பகமானது.

இதிலுள்ள தரமான உறுப்புகள் முன்கூட்டியே ஒயர் செய்யப்பட்டவை யாதலால் இது வீடு, அலுவலகம், கடை தொழிற்கூடம், எங்கும் பொருத்த எளிதானது, உபயோகத்திற்குச் சிக்கனமானது.

**சிக்கனமான மின்சாரச் சிலவில் சிறந்த ஒளி தருவது—பிலிப்ஸ்**

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்




**பிலிப்ஸ்**

PHL-7147

# கலை அரசிகள் இருவர்

சமீபத்தில் வட நாட்டிலிருந்து இரு கலை அரசிகள் சென்னைக்கு விஜயம் செய்தனர். ஒருவர் நடன ராணி; மற்றவர் இசையரசி. இருவரது கலை நிகழ்ச்சிகளுமே லயன்ஸ் கிளப் ஆதரவில் நடைபெற்றன.

''ஐம்பது வயதுக்கு மேலான இந்த மூதாட்டி என்னத்தை ஆடப் போகிறார்?'' என்று ஏளனமாக நினைத்தவரும், ஸிதாரா தேவியின் நடனத்தைப் பார்த்துப் பிரமித்துப் போயினர். பதினாறு வயதுப் பெண்கூட அவ்வளவு துடிதுடிப்புடன் நடனம் ஆடுவது சிரமம். இவரது பாதங்கள் அரைக் கணம் கூட ஓய்ந்திருப்பதில்லை. துருதுருவென்று மேடையில் இவர் சர்வ கலபமாகவும் லாகவமாகவும் இந்தக் கடினமான 'கதக்' நடனத்தை ஆடிக் காட்டினார். லய வாத்தியங்களில் — 'பக்வாஜ்' தபாலாவில் — எழும்பும் லய பேதங்களை எளிதில் தமது அடிகளில் பிரதிபலித்துக் காட்டினார். பார்ப்போருக்குத் தலை சுற்றல் எடுக்கும் வேகத்தில் சுழன்றாடினார்.

'' 'கதக்' நடனத்தில் லயமும் தாளக் கட்டும் கூடிய வெகு துரிதமான நிருத்தத்தைத் தவிர வேறு என்ன இருக்கிறது! ஒரு பாவம், அபிநயம் பரதநாட்டியத்தில் போல் உண்டா?'' என்று நினைத்தவர்கள் உண்டு. ஸிதாரா தேவியின் நடனத்தைப் பார்த்தவர்கள் இந்தத் தவறான எண்ணத்தைக் கைவிட்டிருப்பார்கள். 'பாலகிருஷ்ணா' என்ற பொருளடங்கிய பாடலுக்கு அவர் பிடித்த அபிநயமும், காட்டிய முக பாவங்களும் அப்படியே கண்ணன், யசோதை, கோபியர்களை நேரில் கொணர்ந்து நிறுத்துவது போலிருந்தது. ஒரு கோபி கண்ணனைத் தேடிக் கொண்டு யமுனை நதியைப் படகில் கடப்பது போல் பிடித்த அபிநயம் அப்படியே தத்ரூபமாகப் படகு அசைவது போலவும் தண்ணீரில் மிதப்பது போலவும் பிரமையை உண்டாக்கியது. இவர் சில ஆண்டுகளுக்கு முன், தொடர்ந்து 11 மணி நேரம் நடனம் ஆடியிருக்கிறார் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

'கஜல் பேரரசி' பிஜூலிக் அகாடமி அரங்கத்தைத் தமது இனிய, கம்பீரமான குரலால் நிரப்பினார். 'கஜல்' என்பது இந்துஸ்தானி சங்கீதத்தில் 'லகு' ரகத்தைச் சேர்ந்தது. கர்நாடக சங்கீதத்தில் ஜாவளி, துக்கடா போன்ற வகை. ஆனால் அன்று பேகம் அக்தர் பாடிய கஜல்களும், தாத்ராவும், டும்ரியும், மிகக் கனமான இந்துஸ்தானி சங்கீத பாணியிலேயே இருந்தன. அறுபதாண்டுகளைக் கடந்த இந்தப் பேரரசியின் குரல் இளம் பாடகியின் குரலைத் தோற்கடிக்கிறது. அதில் அவ்வளவு கம்பீரம், நயம், இனிமை எல்லாம் கலந்துள்ளன. இவ்விரு வட நாட்டுக் கலையரசிகளையும் சென்னை ரசிகர்கள் வானளாவப் பாராட்டியதில் ஆச்சரியமில்லை. சென்னை ரஸிகப் பெருமக்களை இக்கலையரசிகள் வாயாரப் புகழ்ந்ததிலும் அதிசயமில்லை.

—பரதன்

---



## குட்டி போடும் வட்டி!

என்னை மௌண்ட் ரோடில் உள்ள பாங்க் கிளை ஆபீஸுக்கு மாற்றியிருந்த சமயம். ஸ்டேட்மெண்டுகளை எழுதி, சரிபார்த்து என்னிடம் ஒப்படைக்க எனக்கு ஒரு கிளார்க் கொடுத்திருந்தார்கள். நான் புதிதாக மாற்றலாகி வந்திருந்ததால் என்னை நானே அறிமுகப்படுத்திக் கொண்டேன்.

''நான் சுந்தரராமன்.''

''மகிழ்ச்சி சார்! நான் ராவணன்'' என்றார் அந்தக் கிளார்க்.

அவர் சொல்லி முடிப்பதற்குள் சுற்றியிருந்தவர்கள் 'பக்' என்று சிரித்து விட்டார்கள். 'ராமன்-இராவணன்! ஆஹா, என்ன பொருத்தம்' என்று நினைத்துக் கொண்டார்கள் போலும்!

இரண்டு நாட்கள் கழித்து அவரிடம் போய், ''மிஸ்டர் ராவணன், ஸ்டேட்மெண்ட் எல்லாம் எப்படி இருக்கிறது?'' என்று கேட்டேன்.

''இன்னும் செய்ய வேண்டியது நிறைய இருக்கிறது.''

''இன்றைக்கு முப்பது தேதியாகி விட்டது...''

''எனக்கு வவுச்சர்கள் கிடைக்க மாட்டேன் என்கிறது.''

''அப்படி யெல்லாம் சொல்லக் கூடாது. எப்போது தயாராகும்?''

''இன்று போய் நாளை வாருங்கள், தருகிறேன்'' என்றார் அந்தக் கலியுக ராவணன். சிரிப்புக்குக் கேட்கவா வேண்டும்?

• • •

'பிக்ஸட் டெபாஸிட்' போட்டிருந்த அவர், அதற்கான வட்டியை வாங்கிப் போக வந்திருந்தார். வட்டியும் கணிசமான தொகை.

'டெபாஸிட் டெபாஸிட்' என்று பரக்கும் ராமநாதன் சும்மா இருப்பாரா? வந்தவரிடம் ஒரு சின்ன 'லெக்சர்' அடித்துவிட்டு 'இதோ பாருங்கள், இந்தப் பிக்ஸட் டெபாஸிட்டில் ஏழு சதவிகிதத்தில் கிடைத்த வட்டி இது. இதை ரொக்கமாக வாங்கிப் போகாமல், உங்கள் சேமிப்புக் கணக்கில் போட்டுக் கொள்ளுங்களேன்!'' என்றார்.

''இல்லை, இல்லை. பணம் எனக்கு அவசரமாகத் தேவைப்படுகிறது.''

ராமநாதன் விடவில்லை. ''எதற்குச் சொல்கிறேன் என்றால், இப்போது சேவிங்ஸ் பாங்கில் ஏப்ரல் முதல் தேதி முதல் ஐந்து பர்ஸெண்ட் வட்டி கொடுக்கிறோம். அதில் போட்டு வைத்தால் இந்த வட்டி குட்டி போடும்.''

வந்தவர் சட்டென்று சொன்னார்: ''அதெல்லாம் சரிதான் ஸார். என் மனைவியும் நேற்று ஆஸ்பத்திரியில் 'குட்டி' போட்டிருக்கிறாள். அதற்குச் செலவுக்குத்தான் இந்தப் பணம்!''

எல்லோரும் என்னமாய்ச் சிரித்தார்கள்! வாழ்த்துக் கூறி அனுப்பினார்கள்!

-இறைவன்



# 48. நாடகத் திரை விழுந்தது!

புதுதில்லி, ராணுவத்தின் துப்பறியும் இலாகாத் தலைமையகம். பல்வந்த் சிங்கின் விசாலமான அறை ஒருபுறம் மேஜை நாற்காலி. மறுபுறம் ஒரு சோபா செட். அதில் தனஞ்செயன் அமர்ந்து சிகரெட் புகைத்தவாறே சில நாளிதழ்களை ஆராய்ந்து கொண்டிருந்தான். பல்வந்த் சிங் அறையில் குறுக்கும் நெடுக்குமாக அலைந்தபடி தனஞ்செயன் உரக்கப் படிப்பனவற்றைக் கேட்டார்.





## விண்ணும் மண்ணும்

கி.ராஜேந்திரன்

"அமெரிக்க விஞ்ஞானி கடத்தப்பட்டார்!" என்ற தலைப்பில் பத்திரிகைகளில் செய்தி வெளியாகியிருந்தது. "அமெரிக்காவிலிருந்து சுற்றுலா நிமித்தம் இந்தியா வந்த விஞ்ஞானி மைக்கேல் என்பவரும் அவரது காதல் எனக் கருதப்படும் அனுபமாவும் இன்று கொனாரகாவிலிருந்து திரும்பும்போது வழிமறிக்கப்பட்டனர். இவர்கள் ஏறியிருந்த டாக்ஸியின் டிரைவர், ஒரு ஜீப் சாலையின் குறுக்கே நிறுத்தப்பட்டிருந்ததாகவும் அதிலிருந்து இறங்கி வந்த முகமூடி அணிந்த மனிதர்கள் தன் வாயையும் கைகால்களையும் கட்டிப் போட்டு விட்டதாகவும் போலீஸில் புகார் செய்திருக்கிறார். டிரைவரைச் சாலை ஓரத்தில் புதர்களுக்குப் பின்னால் கட்டிப் போட்டவர்கள் அனுபமா, மைக்கேல் ஆகியவர்களோடு டாக்ஸியையும் கடத்திக் கொண்டு போய் விட்டனராம். மறுநாள் காலை வழிப்போக்கர்கள் டிரைவர் காளிசரணைக் கண்டு கட்டுக்களை அவிழ்த்தார்களாம். போலீசார் புலன் விசாரித்து வருகிறார்கள். மைக்கேலின் காதலி எனக் கருதப்படும் அனுபமாவும் அமெரிக்கப் பிரஜைதான் என்றும், அவளும் மைக்கேலைப் போலவே விண்வெளித் துறையில்தான் ஆராய்ச்சிகளை நடத்திக் கொண்டிருந்தாள் என்றும் புவனேசுவரில் அவர்கள் தங்கியிருந்த ஹோட்டல் அறையைச் சோதனையிட்டதில் தெரிய வருகிறது.

"விஞ்ஞானிகளைக் கடத்திப் போனவர்கள் நாக்ஸலைட்டுகளாக இருக்கலாம் என்றும், செஞ்சீனாவுக்கு அவர்களை இரகசியமாக அழைத்துப் போக முயற்சி செய்யலாம் என்றும் போலீஸார் ஊகிக்கின்றனர். இதைத் தடுக்கும்

உத்தேசத்துடன் தீவிரமான நடவடிக்கைகளை அவர்கள் மேற்கொண்டுள்ளனர்.''

இவ்வாறு தனஞ்செயன் படித்து முடித்ததும், ''அந்த முயற்சியில் போலீஸார் தோல்வியடைவார்களாக'' என்று 'வாழ்த்தி' விட்டுச் சிரித்தார் பல்வந்த் சிங். ''எப்படி நான் போலீஸ் கமிஷனரின் ஒத்துழைப்புடன் பத்திரிகைகளுக்குக் கிடைக்கச் செய்த செய்தி? சரிதானா?''

''ரொம்பக் கச்சிதம். அதிலும் 'அவரது காதலி என்று கருதப்படும் அனுராதா' என்று போட்டிருக்கிறீர்களே, அதற்காக உங்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். காதலி என்று கூறாமல் கருதப்படும் என்ற வார்த்தையைச் சேர்த்திருக்கிறீர்கள் அல்லவா?''

''உன் மனமறிந்து செயல்பட்ட எனக்குப் பஞ்சாபி ஹோட்டலில் இன்றிரவு டின்னர் தர வேண்டும் நீ!''

''பஞ்சாபி உணவுதான் தினமும் சாப்பிடுகிறீர்களே. மதராஸி ஹோட்டலுக்குப் போவோம்'' என்றான் தனஞ்செயன்.

இதற்குத் தலையாட்டிச் சம்மதம் தெரிவித்தபடியே பல்வந்த்சிங் அலறிய டெலிஃபோனிலிருந்து ரிஸீவரை எடுத்துக் கேட்டார். அவர் முகம் வெளிறியது. உற்சாகமெல்லாம் பறந்தோடிவிட்டது. ''உம், உம்'' என்பதற்கு அதிகமாக ஏதும் கூறாத அவர், கடைசியில், ''ஐ ஸீ'' என்றார். பிறகு, ''சரி, நான் கவனிக்கிறேன்'' என்பதாகச் சொல்லிவிட்டு ஃபோனைக் கீழே வைத்தார்.

கைகளைப் பிசைந்து கொண்டு அவர் மீண்டும் குறுக்கும் நெடுக்குமாக அலைவதைப் பார்த்துத் தனஞ்செயன் தவித்தான். 'என்ன' என்று கேட்கத் துடித்தான். ஆனால் அவராகவே கூறக் காத்திருப்பதுதான் பண்பு என்பதால் வாளாவிருந்தான்.

சில நிமிஷங்கள் சிந்தனைக்குப் பிறகு பல்வந்த் சிங் தனஞ்செயனை நேருக்கு நேராகப் பார்த்தபடி நின்றார். ''நமது நாடகம் பிசுபிசுத்துவிட்டது'' என்றார்.

''அது நாம் எதிர்பார்த்த விஷயம் தானே! மைக்கேல் மாமேதை யல்லவா? எத்தனை நாளைக்கு அவனை ஏமாற்ற முடியும்? இப்படி ஒரு நாடகம் நாம் நடத்தியதன் நோக்கம் அவனை ஏமாற்ற வேண்டும் என்பதை விட, ஊர் உலகத்தை உத்தேசித்துத்தானே? முக்கியமாக இங்குள்ள அமெரிக்க ஸி. ஐ. ஏ. பேர்வழிகளுக்கு ஒரு கண் துடைப்பாக இருக்கட்டும் என்றுதானே?''

''ஆயினும் இவ்வளவு சீக்கிரம் இத்தனை எளிதாக நமது இரகசியம் அவனுக்கு அம்பலமாகி விடும் என்று நான் நினைக்கவில்லை. எத்தனை முன்னேற்பாடுகள்! எவ்வளவு முன்ஜாக்கிரதை! எல்லாம் பயனற்றுப் போயின. நம் காரியம் முடிந்த பிறகு அவன் விஷயத்தைப் புரிந்து கொண்டிருந்தால்... ஆனால் அது இனி பயனற்ற சிந்தனை.''

''எப்படித் தெரிந்து கொண்டான்?''

''சிறையில் இருப்பதாகவேதான் இரண்டு நாட்கள் நம்பியிருக்கிறான். மூன்றும் நாள் நமது தடையுத்தரவை மீறியோ அல்லது அதுபற்றி அறியாமலோ ஒரு செம்படவன் கட்டுமரத்தில் அந்தப் பக்கமாக வந்திருக்



கிறான் — போலீஸார் ஏமாந்து விட்டிருக்கிறார்கள் அல்லது அசிரத்தையாக இருந்திருக்கிறார்கள். ஜன்னல் வழியே மீனவனைப் பார்த்ததும் அவனிடம் மன்றாடிக் கட்டு மரத்தில் ஏறித் தப்பி விடலாம் என்று மைக்கேல் நினைத்திருக்கிறான்.''

''நாம் நியமித்திருந்த இரண்டு சீனக் காவலர்கள்?...''

''இருக்கிறார்கள். வீட்டை விட்டு வெளியேறுவதானால் அவர்கள் காவலிருக்கும் அந்த வாசல் ஒன்றுதான் வழி. ஆனால் அவனைச் சுடக் கூடாது என்று நாம் உத்தரவிட்டிருப்போம் என்பதை மைக்கேல் ஊகித்திருக்கிறான். செத்துப்போனால் அவனால் நமக்கென்ன லாபம்? எனவே தப்பி ஓடிவிட முயன்றாலும் தடுத்து நிறுத்தத்தான் பார்ப்பார்களே ஒழிய உயிருக்கு ஆபத்தில்லை என்ற தைரியத்துடன் குளியலறையில் துண்டு தொங்க விடப் போட்டிருந்த கனமான கம்பியைக் கழற்றிக்கொண்டு வாசலுக்கு வந்திருக்கிறான். தாக்குதலைச் சற்றும் எதிர்பாராத காவலர்கள் அடிபட்டுச் சாய்ந்திருக்கிறார்கள். இவன் மீனவனிடம் ஓடியிருக்கிறான்...''

* * *

கரையில் இருந்தபடியே சற்றுத் தூரத்தில் மிதந்த கட்டு மரத்தின் கவனத்தைக் கவர முயன்றான் மைக்கேல். ''யூ தேர்!'' என்று கூவியும் 'இங்கே வா' என்று ஜாடை காட்டியும் குதித்தான்.

காவலர்கள் எழுந்து வருகிறார்களோ என்று இடையில் ஒரு முறை திரும்பிப் பார்த்துக் கொள்ளவும் செய்தான். ஒருவன் தலைக் காயத்தில் மயங்கி விழுந்தவன் தான். இன்னும் எழவில்லை. மற்றொருவன் காலில் அடி வாங்கிக் கொண்டு சரிந்தவன். தட்டுத் தடுமாறி எழுந்து நொண்டி நொண்டி



இரண்டு அடி எடுத்து வைத்தான். வேதனை தாங்காமல் தரையில் சாய்ந் தான். ஒருவேளை அவனுக்கு இலேசான எலும்பு முறிவுகூட ஏற்பட்டிருக்கலாம்.

செம்படவன் கரையோரமாகக் கட்டு மரத்தைச் செலுத்தினான். மைக்கேல் அவனை உற்றுக் கவனித்தான். கண்களை அகல விழித்துப் பார்த்தான். 'சீனனா இவன்? சேச்சே! இருக்கவே முடியாது! பிறகு.... பிறகு?... ஹாங்காங் வளை குடாவில் சீனக் கடற்கரையோரமாய் ஒரு தீவில் தான் சிறை வைக்கப்பட் டிருப்பதாக அவர்கள் கூறியது பொய் தானா? நாடகம்தானா இதெல்லாம்?'

''இது என்ன தேசம்?'' என்று கேட்டான் மைக்கேல். பிறகு அவ னுக்கு ஆங்கிலம் புரியாது என்பது நினைவு வரவே ஒரு பிடி மணலை அள்ளி, அதைச் சுட்டிக் காட்டிவிட்டுச் சொரிய விட்டான். பூமியை உள்ளங் கையால் தட்டிக் கேள்விக் குறி ஜாடை புரிந் தான்.

''மணலாண'' என்றான் மீனவன். பிறகு, 'மணல் என்பது எந்த மண்டு வுக்கும் தெரியுமே' என்று யோசித்த வனாய், ''கேரள ராஜ்யமாண'' என் றான். மைக்கேலின் கேள்வியைப் புரிந்து கொண்டு விட்ட பெருமிதம் அவன் முகத்தில் படர்ந்தது.

'கேரளம்! அப்படியானால் நாம் இந்தியாவில்தான் இருக்கிறோம்!' இடை யில் மூலைக் கச்சமாக அணிந்த வேஷ்டி, ஒட்டி உலர்ந்த மேனி, தோளில் மடித் துப் போடப்பட்ட நைலான் வலை, தலையில் முண்டாசு, கரும் பழுப்பு நிறத்தில் உடல் — மீனவனின் தோற் றம் மைக்கேலின் ஊகத்தை உறுதிப் படுத்தியது.

'சீனாவுக்கு நான் கடத்திச் செல்லப் பட்டிருப்பதாக இந்திய ராணுவத் தின் துப்பறியும் பிரிவினரே நாடக மாடிக் கொண்டிருக்கிறார்கள்! அப்படி யானால் அனுபமா!... தனஞ்செயன்...? இந்த நாடகத்தின் தொடக்கம் இங்கே இல்லை. நியூயார்க்கிலேயே ஆரம்பமாகி யிருக்கிறது! எஃப். பி. ஐ. உணர்ந்து கூறியன அனைத்தும் நூற்றுக்கு நூறு உண்மை! அனுபமா தனக்குப் பிரஜா உரிமை தந்த அமெரிக்காவுக்குத் துரோகம் இழைத்து விட்டாள். தேசத் துரோகி மட்டுமல்ல, நம்பிக்கைத் துரோகியும் கூட! அவளை முழுக்க முழுக்க நம்பி நான் ஏமாந்து விட்டிருக் கிறேன்! அவளிடம் எனக்குள்ள காதலை எவ்வளவு நீசத்தனமான விதத்தில் பயன்படுத்திக் கொண்டு விட்டாள்!

இதுவரை தான் நம்ப மறுத்தவை அனைத்தையும் இனி நம்பித்தான் ஆக வேண்டும் என்ற நிலை ஏற்பட்ட போது மைக்கேல் அப்படியே நொடித் துப்போய் மணலில் தவழ்ந்த நிலைக்கு விழுந்தான். மணலைப் பிசைந்தபடியே விம்மி விம்மி அழுதான். குழந்தைப் பிராயம் தாண்டிய பிறகு அவன் இன்றுதான் முதல் தடவையாக அழு கிறான். அவன் அழுதது தன்னை எண் ணியா? அனுபமாவை உத்தேசித்தா? அல்லது அவள்மீது தான் கொண் டிருக்கும் அசைக்க முடியாத காதலைக் கருதியா? அனுதாபப் பெருமூச்சிலே தொலைவில் கடலின் நெஞ்சம் விம்மித் தாழ்ந்தது.

## 49. மனத்திரை கிழிந்தது!

காலில் எலும்பு முறிவு ஏற்பட்டு விழுந்தவன் பாண்ட் பாக்கெட்டி லிருந்து மிகவும் சிரமப்பட்டு 'வாக்கி டாக்கி'யை எடுத்து 'ஆன்டென்னா'வை உயர்த்தி மேலதிகாரிகளுடன் பேசி னான். சிறு ரேடியோக் கருவி மைக் கேல் தப்பிச் செல்ல முயல்வதை அவர்களுக்கு உணர்த்தியது.

அவசர உதவி கோரி முடித்த கையோடு அந்தச் சீனக் காவலனுக்கு மற்றொரு பேரதிர்ச்சி காத்திருந்தது. மைக்கேல் தப்பிச் செல்ல முற்படா மல் அமைதியாகத் திரும்பி வந்தான்! அவன் அருகில் நின்றுகொண்டு ஆங் கிலத்தில் கூறினான்:

''நீங்கள் எல்லோரும் பரம்பரை பரம்பரையாக இந்தியாவில் வாழ்ந்து வரும் சீனர்கள் என்பது எனக்குத் தெரி யும். இது சீனா இல்லை இந்தியா — கேரள மாநிலம் என்பதும் புரிந்து போயிற்று. உங்கள் அனைவருக்கும் ஆங் கிலம் தெரியும். மொழிபெயர்ப்புத் தேவையில்லை என்றும் நம்புகிறேன். உன் உயர் அதிகாரிகளிடம் எனக்குப் பேச வேண்டும். வரச்சொல்லு. அவ சரம் இல்லை; நிதானமாக வரலாம்! நான் தப்பி ஓடிவிட மாட்டேன்!''

இவ்விதம் கூறிவிட்டு வீட்டினுள் நுழைந்த மைக்கேல் சோபாவில் சாய்ந்து உச்சி முகட்டைப் பார்த்த வாறு பிரமை பிடித்தவன் போல் அசையாது கிடந்தான்.

காவலர்களின் செய்தி கிடைக்கப் பெற்று வந்த சீன 'அதிகாரி'களிடம் பேசியபோதுகூட அவன் தலையைத்

# தலையாய கூந்தல் அலங்கார நிபுணர்கள் சிபாரிசு செய்வது க்ளீம் ஷாம்பு— கேசத்தைப் பட்டுப்போல் சுத்தமாகவும், படியும்படியும் வைப்பதற்கு.



க்ளீம் ஷாம்பு கார நீரிலும் மென்னீரிலும் நுரை கொழிக்கச் செய்கிறது. கேசத்தைத் துப்புரவாக சுத்தம் செய்கிறது. பட்டுப் போலவும் பளபளப்பாகவும் ஆக்குகிறது.



புது டில்லியைச் சேர்ந்த கூந்தல் அலங்கார நிபுணர் மேடம் பி. ராய் க்ளீம் ஷாம்புவைப் பாராட்டு கிருர். "கேசத்தை மிருதுவாகவும் படியும் படியும் வைக்கிறது. கேசம் நீளமானுலும் குட்டையானுலும் விரும்பும் வகையில் படியவைக்க உதவு கிறது க்ளீம்" என்கிருர் அவர்.

க்ளீம் ஷாம்பு கேசம் படிவதற்கும் நவீன கூந்தல் அலங்காரத்துக் கும் துணை புரிகிறது.

அதன் பிரெஞ்ச் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள். அதிகபட்ச சிக்கனம் பெற 400 மி.லி. பாட்டில் வாங்குங்கள்.








# க்ளீம் ஷாம்பு

**கார நீரிலும் மென்னீரிலும் நுரை கொழிக்கிறது**

3 சைஸ்கள் : 100 மி.லி., 200 மி.லி., 400 மி.லி.

Geoffrey Manners & Co. Ltd.

G.32

தாழ்த்தவில்லை. கூரையை நோக்கிய படியே இருந்தான்.

"நீங்கள் தனஞ்செயனுடன் தொடர்பு கொள்ளுங்கள். அனுபமாவையும் அழைத்துக் கொண்டு அவனை இங்கு உடனே வரச் சொல்லுங்கள். இருவருமாகச் சேர்ந்து வந்து, இந்திய ராக்கெட் விஞ்ஞானத்தில் முன்னேற நான் உதவ வேண்டும் என்று கேட்டுக் கொள்வார்களேயானால் அவர்கள் கோரிக்கையை நிறைவேற்றி வைக்க நான் தயார்! ஆனால் பலவந்தத்தினால் என்னிடம் எதையும் சாதித்துக்கொள்ள முயல வேண்டாம். அது கொஞ்சம் கூடப் பலன் தராது. அனுபமா சித்திரவதைக்குள்ளாவாள் என்ற மிரட்டலையும் நான் இனி நம்பப் போவதில்லை. இதை அவனுக்குத் — தனஞ்செயனுக்குத் — தெரியப்படுத்துங்கள்!"

*   *   *

**ப**ல்வந்த் சிங் தனஞ்செயனிடம் கேட்டார்: "இந்த மாதிரி செய்தி அனுப்பி யிருக்கிறானே மைக்கேல். இப்போது என்ன செய்ய?"

"மைக்கேலின் விருப்பப்படி நடப்பதைத் தவிர எனக்கு வேறு ஒரு வழியும் புலப்படவில்லை" என்றான் தனஞ்செயன்.

"நானும் யோசித்து அந்த முடிவுக்குத்தான் வந்தேன். நீ உடனே புறப்படு" என்றார் பல்வந்த் சிங்.

*   *   *

**ஆ**காய மார்க்கமாகத் தனஞ்செயனோடு பயணப்பட்டு வந்து திருவனந்தபுரம் விமான நிலையத்தில் காலடி எடுத்து வைத்ததுமே, இந்தப் பூமி அப்படியே பிளந்து நம்மை விழுங்கி விடாதா என்று ஏங்கினாள் அனுபமா. சீதாப் பிராட்டிக்கு அப்படித்தானே நேர்ந்தது? ஆனால் அது போல் நமக்கும் பூமித்தாய் பேருபகாரம் செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்க நமக்கு என்ன அருகதை இருக்கிறது? சீதை எத்தனையோ துயரங்களைச் சகித்துக் கொண்டாள். இனித் தாளாது என்கிற நிலையில், பூமியை அகழ்ந்தபோது அகப்பட்ட அவள் நிலத்தின் வெடிப்பிலேயே மறைந்தாள். நான் அப்படி என்ன துயரங்களை அனுபவித்து விட்டேன்? பச்சைத் துரோகங்கள் புரிந்த எனக்கு அத்தனை சுலபமான முடிவு கிடைத்து விடுமா? அதற்கெல்லாம் கழுவாய் தேடத்தான் வேண்டும். மைக்கேல் முன்னால் அவமானத்தால் கூசிக் குறுகி, வெட்கித் தலை குனிந்து நின்று கண்ணீர் பெருக்குவதைக் காட்டிலும் சிறந்த பிராயச்சித்தம் வேறு என்ன இருக்க முடியும்?

சாலையோடு காரில் சென்று பின்னர் ஓரிடத்தில் விசைப் படகில் ஏறி உப்பங் கழிகளினூடே நீண்ட பயணத்தைத் தொடர்ந்து மைக்கேல் சிறை வைக்கப் பட்டிருந்த தீவில் கரையேறிய அனுபமா அடுத்த அடி எடுத்து வைக்க முடியாமல் தவித்தாள். அதுவரையில் அவள் மனநிலை உணர்ந்து மௌனத்தின் மூலமே ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்து வந்த தனஞ்செயன் இப்போது பேசினான்:

"அனு! மனத்தைத் திடப்படுத்திக் கொள். சரியோ தவறோ நடந்தது நடந்து விட்டது. இனி பின்வாங்க முடியாது. தொடர்ந்து முன்னேறித் தான் ஆக வேண்டும். உன்னுடைய செயல்களுக்கு நீமட்டுமே பொறுப்பல்ல என்பதும் என்னுடைய உந்துதலும் பெருமளவு காரணமா யிருந்தது என்பதும் மைக்கேலுக்குத் தெரியாமல் போகாது. அந்த அளவுக்கு உன்மீது அவனுக்குள்ள வெறுப்பும் கோபமும் மட்டுப்படும். தைரியத்தை வரவழைத்துக்கொள்!"

தைரியத்தையாவது வரவழைத்துக் கொள்வதாவது! தூக்குமேடைக்குச் செல்லும் ஒருவனுடைய மனநிலையில் நடந்தாள் அனுபமா!



**உன்னை மறந்து அவனை நினை!**

கடவுள் நாவின் பேச்சுக்கோ அறிவின் பேச்சுக்கோ செவி சாய்ப்பவரல்ல. அன்பு நிறைந்த இதயத்தின் சொல்லையே கேட்பவர்.

இறைவனுக்கு நாம் செலுத்தக் கூடிய சிறந்த பிரார்த்தனை அவர் இருக்கிறார் என்பதற்காகவே அவரைப் போற்றுவதுதான். எதையோ பதிலுக்கு எதிர்பார்த்துப் போற்றும் பான்மையில்லை, நம்மை மறந்து அவரை வாழ்த்த வேண்டும்.

பொருளுக்கு ஆசைப்பட்டுப் பகவானைப் பிரார்த்திப்பது பிரார்த்தனையல்ல, கேலிக் கூத்து.

- மெஹர் பாபா.

அவள் வந்து விட்டாள்; தன் எதிரே நிற்கிறாள் என்பதை உணர்ந்தபின்னர் தான் சோபாவில் அமர்ந்தபடி இது வரை பிரமை பிடித்தாற்போல் மேற்கூரையையே பார்த்துக் கொண்டிருந்த மைக்கேலின் சிரம் தாழ்ந்தது.

பயங்கரக் குற்றம் புரிந்து விட்டு நீதிபதியின் தீர்ப்பை எதிர்பார்க்கும் கைதியைப் போல் அவள் நின்றாள்.

சிறைப்பட்டிருந்த மைக்கேலோ கருணையோடு தன் அதிகாரத்தைப் பயன்படுத்தும் உன்னதமான ஒரு நீதிபதியின் ஸ்தானத்தில் இருந்தான்! பேசினான்:

''அனு! இத்தனை நாட்களாக எனக்குப் புரியாதிருந்த உன் மனநிலை இன்று மிகத் தெளிவாகி விட்டது. பிரஜா உரிமையை உனக்கு அளித்து ஆதரித்த நாட்டுக்கு நீ கடமைப்பட்டிருக்கிறாய். ஆயினும் இரத்தத்தில் கலந்த தாய்ப்பால் காரணமாக உன் தாய் நாடு பாரதமாகவே இருந்து வந்திருக்கிறது. இரண்டுக்கும் இடையே உன் மனம் ஊசலாடியிருக்கிறது. கடைசியில் தாய்நாட்டுப் பாசமே வெற்றி பெற்றிருக்கிறது. உன்னை நம்பிய நாட்டையும் அன்பைச் சொரிந்த காதலனையும் ஏமாற்றவும் துணிந்தாய். ஆனால் இதில் அதிசயம் என்னவென்றால் அதற்காகவெல்லாம் உன்னைக் கோபித்துக் கொள்ள எனக்குத் தோன்றவில்லை! உன் நிலையில் நான் இருந்திருந்தால் வேறுவிதமாக நடந்து கொண்டிருக்க மாட்டேன் என்றே எனக்குப் படுகிறது. இதைவிட ஆச்சரியம் உன்னை முழுக்க முழுக்க நம்பி மோசம் போனேன் என்று தெரிந்த பிறகும் உன்மீது எனக்கு ஏற்பட்டுள்ள காதல் அணுவளவும் குறையவில்லை. இது எனக்கே வியப்பாயிருக்கிறது. உன்மீது எனக்குள்ள ஆழ்ந்த, அசைக்க முடியாத காதலை எனக்கே உணர்த்துவதாயும் உள்ளது. அனு! அந்தக் காதலை முன்னிட்டு நான் தேசத்துரோகியாக மாறவும் சித்தமாயிருக்கிறேன்! இதற்காக நான் எந்தப் பிரதிபலனையும் எதிர்பார்க்கவில்லை. உன் காதலைக்கூடக் கோரவில்லை. காதல் வற்புறுத்திப் பெறுகிற விஷயமில்லை. தியாகத்துக்குக் கூலி கேட்பதும் நியாயமில்லை.

''நான் இந்தத் தியாகத்தை—தேசத்துரோகியாக மாறும் மகத்தான தியாகத்தைப் புரியுமுன் உன்னிடமிருந்து—ஒன்றே ஒன்றைத்தான் எதிர்பார்க்கிறேன். 'ராக்கெட் விஞ்ஞானத் துறையில் இந்தியா வேகமாக முன்னேற உதவுங்கள்' என்று நீ வாய் விட்டு என்னைக் கேட்க வேண்டும்! அதைச் செய்!''

அந்த ஒரு விநாடியில் அனுபமாவுக்கு ஒரு திரை கிழிந்தாற்போன்ற உணர்வு ஏற்பட்டது. கிழிந்த திரைக்குப் பின்னால் அவள் எத்தனை எத்தனையோ ஜன்மங்களில் மைக்கேலின் அளப்பரிய காதலைத் தான் பெற்றுள்ளதோடு வழங்கியும் இருப்பதான காட்சிகளைக் கண்டாள். அந்தக் காதல் பரிமாற்றத்தால் ஏற்பட்ட மெய்சிலிர்க்கும் இன்பங்களையும் விவரிக்கவொண்ணாத துன்பங்களையும் பார்த்தாள். ரோமியோ — ஜூலியத்தாக, லைலா — மஜ்னுவாக, சாவித்திரி—சத்தியவானாக, நளன் — தமயந்தியாக, ராமன்—சீதையாக இருந்தவர்களெல்லாம் வேறு யாருமல்ல, அனுபமா — மைக்கேல் தான் என்று அவளுக்குத் தோன்றியது. எத்தனை எத்தனையோ ஜன்மாக்களில் அவனுக்குத் தான் வரையறையின்றி வழங்கி வந்த காதலை இந்தப் பிறவியில் இதுவரையில் அளிக்க முடியாமல் தடுத்த மாயத் திரை கிழிந்து தொங்கிய அந்த விநாடியில், அவள் பாய்ந்து சென்று மைக்கேல் முன் மண்டியிட்டு விழுந்து அவன் கால்களைக் கட்டிக் கொண்டாள். அவன் மடியில் தன் தலையைச் சாய்த்துக் கட்டுக்கடங்காத சந்தோஷமும் அதே சமயம் கவலையும் மீதுறக் கண்ணீர் பெருக்கி விம்மி விம்மி அழுதாள். தட்டுத் தடுமாறி வார்த்தைகளும் வெளிவந்தன: ''என்னை மன்னித்து ஏற்றுக்கொள் மைக்! உன் பாதங்களில் மனப்பூர்வமாக என் காதலைச் சமர்ப்பிக்கிறேன். நிராகரித்து விடாதே!''

நிராகரிப்பானா மைக்கேல்? இந்த ஒரு கணத்துக்காக அவன் காத்திருந்த நாட்கள் ஒரு யுகமாக அல்லவா ஊர்ந்து சென்றிருக்கின்றன! அள்ளி அணைத்தபடியே அவன் எழுந்து நின்றான். நெருப்பு நெருப்போடு இணைந்து ஒன்றை ஒன்று இறுகத் தழுவியது. ஆனால் அதுவரையில் ஜ்வாலை விட்டுத் தகித்துக் கொண்டிருந்த இரு மனங்களோ தண்ணென்று குளிர்ந்தன!

மூச்சுவிடச் சற்று அவகாசம் கிடைத்த தருணத்தில் அனுபமா கேட்டாள்: ''மைக்! என் கோரிக்கையை நிறைவேற்றுவாயா? பாரதத்துக்கு ராக்கெட் விஞ்ஞானத் துறையில் உதவுவாயா?''

''ஆகட்டும், ஆகட்டும், ஆகட்டும்!'' என்றான் மைக்கேல், தனது கண்களிலிருந்து பெருக்கெடுப்பது ஆனந்தக் கண்ணீரா துயரக் கண்ணீரா என்பதே புரியாமல்.

(தொடரும்)

# பொழுது போக்கு

பி. எஸ். எம்.

**உயரவில்லை!**

கல்லூரி மாணவர் தலைவன் ஹாஸ்டல் வார்டனிடம் விலைவாசியைப் பற்றிக் குறிப்பிட்டு விட்டு ''எல்லாம் உயர்ந்து விட்டன!'' என்றான்.

''பொறுமையாக இரு. இன்னும் மூன்று விஷயங்கள் உயரவில்லை!'' என்றார் வார்டன்.

''அப்படியா?'' என்று அதிசயித்தான் மாணவர் தலைவன்.

''ஆமாம்! என்னைப் பற்றி உன் அபிப்பிராயம், உன்னைப் பற்றி என் அபிப்பிராயம், நம் இருவர் பற்றியும் மாணவர்களின் அபிப்பிராயம்!''

உலகின் எந்தப் பாகத்திலிருந்து முதன்முதலில் இந்தக் காய்கறிகள் தோன்றின என்று தெரியுமா?

'காய்கறிகளைச் சமைத்துப் போட்டால் ஒரு வெட்டு வெட்டுவேன்! இப்படி க்விஸ் போட்டுத் தொல்லை அடிக்காதீர்கள்' என்கிறீர்களா?

உருளைக்கிழங்கு, தக்காளி, சீனிக்கிழங்கு, முட்டைக்கோஸ், பட்டாணி, வெள்ளரி, வெங்காயம்?

விழிக்க வேண்டாம்.

**விடை :**

உருளைக்கிழங்கு, தக்காளி-தென் அமெரிக்கா. சீனிக்கிழங்கு-மேற்கிந்தியத் தீவு. முட்டைக் கோஸ் - ஐரோப்பா. பட்டாணி-ஸ்விட்ஜர்லாந்து. வெள்ளரி - இமாலயச் சிகரப் பகுதி. வெங்காயம்-மங்கோலியா.



ஒரு வயதான மனிதருக்கு இதயம் 'வீக்'காக இருந்தது. அவருக்கு லாட்டரிச் சீட்டில் லட்ச ரூபாய் விழுந்து விட்டது. அவர் குடும்பத்தினர் இந்தச் சந்தோஷச் செய்தியைச் சொன்னால் அது ஒரு வேளை அந்த முதியவரைப் பாதித்துவிடுமோ என்று கருதிக் கோயிலின் தர்மகர்த்தாவை விட்டு நாசுக்காகச் சொல்லச் சொன்னார்கள்.

''ஒரு வேளை உங்களுக்கு லாட்டரிச் சீட்டில் பணம் விழுந்தால் என்ன செய்வீர்கள்?'' என்று தர்மகர்த்தா கேட்டார்.

''பரிசுத் தொகையில் பாதியைக் கோயிலுக்குக் கொடுத்துவிடுவேன்!''

தர்மகர்த்தா இதைக் கேட்டு மூர்ச்சையாகிக் கீழே விழுந்தார் !



வீடு கட்ட சிமெண்ட் ஓர் ஆசாமிக்குத் தேவைப்படுகிறது! குறுக்கு வழியில் — கறுப்பு மார்க்கெட்டில் கிடைக்கும். ஆனால் விலை? சரியான வழியில் சென்றால் கண்ட்ரோல் விலையில் சிமெண்ட் பெற முடியும். கறுப்பு மார்க்கெட் இல்லாத இந்தச் சிமெண்ட் கிடங்குக்கு வீடு கட்ட விரும்பும் ஆசாமி எப்படிச் செல்லலாம்? உதவுங்கள்.







ஒரு பிரபல சினிமா நடிகை விவாகரத்து கோர விரும்பினாள். வக்கீல், "உடனே மெக்ஸிகோவுக்குப் போ. விவாக ரத்துக் கிடைத்துவிடும்!" என்றார்!
"எனக்கு ஸ்பானிய மொழி தெரியாதே!" என்றாள் அந்த நடிகை.
"மற்றவர்கள் பேசும்போது அவ்வப்போது கொஞ்சம் இடைவெளி கிடைக்குமல்லவா? அப்போது ஸி ஸி (சரி சரி )என்று சொல்லிக்கொண்டிரு, போதும்!" என்றார் வக்கீல்.

மெக்ஸிகோ தேசக் கோர்ட் ஒன்றில் பெருங்கூட்டம். பிரபல நடிகையாயிற்றே. ஸ்பானிய மொழியில் வழக்குத் தொடர்ந்தது. நடிகையும் பலதடவை 'ஸி ஸி' என்று கூறி வைத்தாள்! திடீரென்று மக்கள் கூட்டம் கரகோஷ ஆரவாரம் செய்தது! "ஆமாம்! எனக்கு விவாகரத்து கிடைத்து விட்டதல்லவா?" என்று தயக்கத்தோடு கேட்டாள் நடிகை.

"விவாக ரத்து கிடைத்து விட்டது!" என்று வியர்வையைத் துடைத்துக் கொண்டே சொன்ன வக்கீல், "உடனே நீங்கள் மேயரை மணந்து கொண்டும் விட்டீர்கள்!" என்றார்.

## அறியாமை அளித்த பரிசு



## நல்ல கேள்வி

அந்த நகரத்தின் பிரமுகர் பேசினார். அவர் தம் வாழ்க்கைச் சம்பவங்களை உருக்கமாக எடுத்துரைத்தார்.

"நண்பர்களே, நான் நாற்பத்தேழு வருஷங்களுக்கு முன் இந்நகருக்கு வந்த போது கப்பல் மாடல் காரில் வரவில்லை. சேற்றிலும் சகதியிலும் நடந்து வந்தேன். உடுத்தியிருந்த ஆடை தவிர வேறு இல்லை. எனக்கென்று இந்தப் பூமியில் உள்ள சொத்து முழுவதையும் ஒரு கர்சீப்பில் முடிந்து கொண்டு வந்து சேர்ந்தேன்!

"இந்த நகரம் எனக்கு நல்லது செய்துள்ளது. நாற்பத்தேழு வருஷங்களுக்குப் பிறகு இங்குள்ள தலைசிறந்த பாங்கியின் நிர்வாகக் குழு டைரக்டர்களுள் நானும் ஒருவன். நான் பல வீடுகளுக்கும், காரியாலயக் கட்டடங்களுக்கும் உரிமையாளன். இந்த நகரம் என்னை வளர்த்தது. நான் நன்றி பாராட்டுகிறேன்."

பிரசங்கத்துக்குப் பிறகு ஓர் இளைஞர் அந்தப் பிரமுகரை அணுகி, "நாற்பத்தேழு வருஷங்களுக்கு முன் நீங்கள் கர்சீப்பில் சுற்றி இந்த நகரத்துக்கு எடுத்து வந்தேன் என்றீர்களே, அது என்ன?" என்று கேட்டார்.

"அதுவா? அந்தக் கர்சீப்பில் மூன்றுலட்சம் டாலரும் ஏழு லட்சம் செக்யூரிட்டி பத்திரங்களும் எடுத்து வந்தேன் அவ்வளவு தான்!" என்றார் அந்தப் பிரமுகர்!



## அரசியல் கட்டம்!

1. நெல்லுடன் அரசாங்க இலாகா ஒன்றும் சேர்ந்தால் ..... 'க....று!'
2. இது அமெரிக்க பிலிம் கம்பெனி சிங்கமல்ல; தமிழ் நாட்டு ஸ்டண்ட் நடிக சிங்கம்!
3. மீசை தொங்கினாலும் பேச்சு தொய்ந்ததில்லை!
4. கூடு விட்டுக் கூடு மாறுவது போல் கட்சிக்குக் கட்சி மாறிப் பல கட்சிகளைக் கண்ட தமிழ்நாட்டுத் தலைவர் இவர்!
5. ஜூலை மாதத்தில் பிறந்த நாள் கொண்டாட விருக்கும் இவர் மக்களின் தலைவர்!
6. அஹிம்சாமூர்த்தி — தேவர் தலைவருடன் அளவளாவுகிறார்.
7. அந்தமானிலிருந்து வந்தவர்; கறுப்புப் பணப் புள்ளிகளுக்கு இவரைக் கண்டால் சிம்ம சொப்பனம்!
8. ஆ!' ஊ என்று ஆர்ப்பாட்டம் பண்ணும் இவர் மனசைத் திறந்து பார்க்கச் சாவி போட்டாலும் பலனில்லை!

(விடை 56ம் பக்கம்)

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | | | |
| 2 | | | | | | | |
| 3 | | | | | | | |
| 4 | | | | | | | |
| 5 | | | | | | | |
| 6 | | | | | | | |
| 7 | | | | | | | |
| 8 | | | | | | | |



# தலைவலியா?

## சக்தி வாய்ந்த, நம்பகமான அனாஸின் விரைவில் குணமளிக்கிறது



"தலைவலியைப் போக்க நான் எப்பொழுதும் அனாஸின் சாப்பிடுகிறேன்" என்கிறார், பம்பாயிலுள்ள ஒரு கப்பல் கம்பெனி அதிகாரி திரு. பரமசிவம்.

**சக்தி வாய்ந்தது—** ஏனெனில், உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனாஸின். ஆகையால்தான் அனாஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

**நம்பகமானது—** திரு. பரமசிவம் போன்ற லட்சக்கணக்கானவர்கள் அனாஸினை நம்புகிறார்கள். டாக்டரின் நம்பகமான மருந்தைப்போல பல மருந்துகளின் கலவையே அனாஸின்.

ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள் மற்றும் நோவுகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனாஸின் சக்திவாய்ந்த நிவாரணி.

சக்திவாய்ந்த, நம்பகமான

**அனாஸின்**

இந்தியாவின் புகழ் பெற்ற வலி-நிவாரணி



Regd. User of TM : Geoffrey Manners & Co. Ltd.



# நட்சத்திர மோகம்

ஸ்ரீதா-



மைவிழி மகளிர்-

"அடி ஹேமா, செய்தியைக் கேட்டியா? எலிஸபெத் டெய்லரும் ரிச்சர்டு பர்ட்டனும் கடைசியிலே விவாகரத்து செய்து கொண்டு விட்டார்களாம்...!" என்று பரபரப்போடு சொன்னாள் சாரு.

அகிலாண்டம்மாள், "யாரு எப்படிப் போனால் என்ன? நல்ல விஷயமா இவள் கண்ணுலே படாது போலிருக்கே... சே...சே சே....!" என்றாள்.

"அப்படியில்லே மாமி, எலிஸபெத் டெய்லர் — ரிச்சர்டு பர்ட்டன் விவகாரம். ரொம்ப நாளா பேப்பரிலே அடிபட்டுக் கொண்டு வர விஷயமாக்கும். ரொம்பப் பெரிய நட்சத்திரங்கள்!" என்றாள் ஹேமா.

"என்ன பெரிய நட்சத்திரங்கள்—சினிமா நட்சத்திரங்கள்தானே?" என்றாள் அன்ன பூரணியம்மாள், மிக அலட்சியமாக.

"என்ன அத்தை, அவ்வளவு அலட்சியமாகச் சொல்லிவிட்டாய். இன்னிக்கு எந்தப் பத்திரிகையை எடுத்தாலும் சினிமா நடிகர் நடிகையர் நடிக்கும் படங்களைப் பற்றிய செய்திகளைவிட அவர்கள் சொந்த வாழ்க்கையைப் பற்றிய செய்திகளைத்தான் அதிகம் போடுகிறார்கள்!" என்றாள் சுந்தர்.

"இந்தக் காலத்துப் பெண்களுக்கு எந்த சினிமா நட்சத்திரம் என்ன ஸ்டைலிலே புடவை உடுத்திக்கிறா, என்ன ஜாக்கெட் போட்டுக்கிறா, என்ன மாதிரி ஹேர் டு பண்ணிக்கிறா இந்த விஷயங்களில்தான் அக்கறை! அதையே பத்திரிகைகளிலும் போடுகிறார்கள்!" என்றாள் அகிலாண்டம்மாள்.

"இதற்கெல்லாம் காரணம் நம் நாட்டுப் பொது வாழ்வில் உயர்ந்த லட்சியம் இல்லாமல் போனதுதான். நாட்டு விடுதலை என்ற லட்சியம் இருந்த காலத்தில் பணக்காரர்கள் எல்லாம் மோட்டா கதர்த் துணி அணிந்தார்கள். எளிய வாழ்க்கை மேற்கொண்டார்கள்; உண்மை பேசுவது வாழ்க்கை முறையாக இருந்தது. அந்த லட்சியம் கைகூடித் தேசம் சுதந்திரம் அடைந்ததும் அரசியல் தலைவர்களிடை மெத்தனமும், ஒழுக்கக் குறைவும் ஏற்பட்டுவிட்டன. மக்கள் அவர்களை விட்டுவிட்டு சினிமா நட்சத்திரங்களைப் பார்த்துக் காப்பியடிக்க ஆரம்பித்து விட்டனர்" என்றார் சங்கரன்.

"இதில் வேடிக்கை என்னவென்றால் நம்ம ஜனங்கள் ஒரு நடிகன் நல்லவனான கதா பாத்திரத்தை ஏற்று நடித்துவிட்டால் அவன் நிஜ வாழ்க்கையிலும் நல்லவனாக இருப்பான் என்று நினைத்து வழிபடவே தொடங்கிவிடுகிறார்கள். ஆனால் வாஸ்தவத்தில் நிஜ வாழ்க்கையில் அவன் படு அயோக்கியனாக இருக்கலாம் அல்லவா?" என்றான் சுந்தர்.

"அப்படியே வில்லனாக நடிப்பவன் சொந்த வாழ்வில் மிக நேர்மையுள்ள நல்ல மனிதனாக இருக்கலாம். ஆனால் திரையில் வில்லனாகப் பார்த்துப் பார்த்துப் பழகி விட்ட ஜனங்களுக்கு அவனை நேரில் பார்த்தால்கூட அந்த எண்ணம்தான் வருகிறது!" என்றான் வேணு.

"மக்கள் மத்தியில் செல்வாக்கும் சீலமும் ஒழுக்கமும் கொண்ட ஒரு லட்சிய புருஷன் தோன்ற வேண்டும்! மக்களுக்கு அப்படி ஒரு வழிகாட்டி தேவை" என்றார் சங்கரன்.

"அந்த நாளிலே மன்னவன் எப்படி மன்னுயிர் அப்படி என்பார்கள்" என்றான் சுந்தர்.

"இன்று நம்மை ஆள்பவர் ஐந்நூற்றுச் சொச்சம் பார்லிமெண்ட் அங்கத்தினர்களும் ராஜ்யங்களில் உள்ள சட்டசபை அங்கத்தினர்களும்தான். இத்தனை பேரும் நல்லவர்களாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்க முடியுமா ?" என்றாள் ஹேமா.

"அதனால் குடியாட்சி ஒழிக! முடியாட்சி வாழ்க என்று சொல்வதா?" என்றாள் சாரு.

"இன்று சிக்கிம் ராஜா சோக்யால் படுற பாட்டிலே முடியாட்சியாவது ஒன்றாவது ?" என்றாள் ஹேமா.

"முடியாட்சி காலம் மலையேறிவிட்டது. குடியாட்சியில் நல்ல பிரதிநிதிகளைத் தேர்ந்

**அரசியல் கட்டம் 'க்விஸ்' விடை :**

1. கருணாநிதி. 2. எம். ஜி. ஆர். 3. ம. பொ. சி. 4. சம்பத். 5. காமராஜ் 6. இந்திரா காந்தி. 7. கணேஷ். 8. புட்டோ.

தெடுத்து சட்டசபைகளுக்கு அனுப்புவது பிரஜைகளின் கடமை'' என்றார் சங்கரன்.

'' என்னடா, பேசறேள், நீங்கள் எல்லாம்— ஒண்ணும் புரியல்லியே ! 'ஒழிக!' கூச்சல் ஒண்ணுதான் புரியறது !'' என்றாள் அன்ன பூரணியம்மாள்.

''நீ கவலைப்படாதே ! நம்ப நாட்டிலே ரொம்பப் பேருக்குப் புரிஞ்ச விஷயம் அந்த ஒரு வார்த்தைதான் !'' என்றான் சுந்தர். ''பெங்களூரிலே பிச்சைக்காரர்களெல்லாம் சேர்ந்து ஒரு பைசா, இரண்டு பைசா மூன்று பைசா நாணயங்கள் ஒழியணும் என்று தீர்மானம் போட்டிருக்கா.''

''ஏனாம் ?'' என்றாள் அகிலாண்டம்மாள்.

'' பிச்சை போடறவா ஒரு பைசா, இரண்டு பைசாவாகப் போடறாளாம். அதனால் அவர்கள் வருமானம் குறைஞ்சுடறதாம் ! ஐந்து பைசாவுக்குக் குறைந்த நாணயமே கூடாது என்கிறா'' என்றான் சாரு.

''இரண்டு பைசா நாணயத்தை ஒழிப்பது இருக்கட்டும். இந்தத் தேசத்திலேயிருந்து இந்தப் பிச்சைக்காரர்களையே ஒழிச்சாத்தான் தேசம் உருப்படும்!'' என்றாள் அன்னபூரணியம்மாள்.

''ஒழிக, பிச்சைக்காரர்கள்!'' என்று ஒரு கூச்சல் போட்டான் வேணு!

''ஒரே வார்த்தையில் பிச்சைக்காரர்களை ஒழிச்சாச்சு! திருடர்களை என்ன பண்ணறது? அவர்களை ஒழிக்க வேண்டாமா?'' என்றான் சுந்தர்.

''கேரளாவிலிருந்து சமீபத்தில் ஒரு செய்தி வந்தது. ஒரு காரில் ஆலப்புழையிலிருந்து கொச்சிக்கு இரண்டு பேர் போய்க் கொண்டிருந்தார்களாம். அந்தக் காரை வழியில் ஒரு பெண் நிறுத்தி ஏறிக் கொண்டாளாம். அவர்களை ஏதோ ஒரு வீட்டுக்கு அழைத்துப் போனாளாம். அங்கே ஒரு கொள்ளைக் கூட்டம் இவர்களிடமிருந்த பணத்தைப் பறித்துக் கொண்டு விட்டதாம் !'' என்றான் வேணு.

''ஆமாம், பெண் என்றால் பேயும் இரங்கும் என்பார்கள். அப்படி இரக்கப்பட்டதன் விளைவு. ஆகவே இனி பெண் என்றால் கொஞ்சம்கூட இரக்கம் காட்டக்கூடாது!'' என்றான் சுந்தர்.

'' வேண்டாம்; பேய்க்கே இரக்கப்படு!'' என்றான் சாரு.

வட்ட மேஜை

# அன்பே, வராதே!

**மே** 26ந் தேதி கல்கியில் 'செலவும் கண்டிஷன் ஆகிறது' என்ற தலைப்பில் ஒரு துணுக்கு வெளியாகியிருக்கிறது. கண்ணாடி ஜன்னல்கள் மீது உட்புறத்தில் ஸோலார் மாஸ்டர் என்ற மெல்லிய பிலிமை ஒட்டிவிட்டால் சூரிய வெப்பம் உள்ளே வருவது கணிசமாகத் தடுக்கப்படுகிறது என்றும் அதனால் ஏர்கண்டிஷன் செய்வதற்கு ஆகும் செலவு குறைகிறது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

அமெரிக்காவில் தயாராகும் அது போன்ற பிலிமை இந்தியாவில் நாங்கள் ஏற்கனவே தயாரித்து விற்பனை செய்து கொண்டிருக்கிறோம், ரெக்ஸோ ஷேட் என்ற வியாபாரப் பெயரில். ஏற்கனவே பசை தடவப்பட்டுள்ள இதனை இலேசாக ஈரமாக்கி, கண்ணாடிக் கதவு ஜன்னல்களில் உட்புறத்தில் ஒட்டிவிடலாம். எங்களுடைய சோதனைச் சாலையில் உருவாகித் தற்போது பெரிய அளவில் உற்பத்தியாகி வரும் இது, அமெரிக்க நிபுணத்துவத்துக்கு நமது அறிவாற்றல் மட்டுப்பட்டதில்லை என்பதை நிரூபிக்கிறது அல்லவா ?

Suriya Kiran — கே. ஆர். அனந்தநாராயணன்
4th Floor — (Rexor India Limited)
19, Kasturiba Gandhi Marg.
New Delhi - 110 001

**உ**ங்கள் கல்கி 9–6–74 இதழில் வெளியான 'அன்பே, வா வா வா !' என்ற துணுக்குகள் நகைச்சுவையோடு மிகவும் நன்றாயிருந்தன.

தாய் வீடு சென்றிருக்கும் மனைவியை அழைக்க (எந்தத் துறையிலிருப்பவராயினும்) ஒரு தந்திரமான வழி இதோ :

அன்பே, உமா ! நலம். நலம் காண ஆவல். நீ உன் பிறந்த வீட்டுக்குச் சென்று மூன்று மாதங்கள் இருக்கும் என்று நினைக்கிறேன். இவ்விடம் நம் பக்கத்து வீட்டு விஜயா (உன் ஆருயிர்த் தோழி) என்னை மிகவும் நன்றாகக் கவனித்துக் கொள்கிறாள். 'இவரைக் தனியா விட்டுட்டுப் போறேன். முடிந்த போது போய் ஏதாவது, வேணுமான்னு கேட்டுக்கோ' என்று நீ அவளிடம் கூறி விட்டுப் போனாயாம்.

காலை விழிப்பது முதற்கொண்டு இரவு உறங்கும் வரையில் அவள் என்னிடம் காட்டும் பரிவு, கரிசனம் எழுதி மாளாது. எனவே என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். நீ உடனே புறப்பட்டு வரவேண்டிய அவசியமில்லை. இன்னும் இரண்டு மாசமோ, நாலு மாசமோ உன் விருப்பம் போல் இருந்துவிட்டு வரவும்.

இப்படிக்கு,
மகேசுவரன்

**'ப**யண இலக்கிய மன்னர்கள்' குறிப்பிலே 'யான் கண்ட இலங்கை' என்ற பயண இலக்கியம் படைத்த டாக்டர் மு. வரதராசனார் அவர்களைக் குறிப்பிடாதது வருத்தமாக இருந்தது.

கோட்டூர்
23–6–74 — பி. சின்னக்கண்ணான்

# மலர்களிலே அவள் மல்லிகை!




மலர்களின் ராணி, மல்லிகை!
இளமைப் பூங்காவில் பூரிப்புடன்
பூத்துக் குலுங்கும் இந்த
இளமங்கை, அழகு
ராணியாகத் திகழ்கிறாள். அந்த
புத்தெழில் என்றுமே நிலைத்திட
அவள் ஜெய் அழகு சாதன சோப்
உபயோகிக்கிறாள். மல்லிகை மணம்
வீசும் ஜெய் சோப் மேனியை
மிருதுவாக்கி, பொன்னொளி
வீசச் செய்கிறது.

மல்லிகை
மணம் கமழும்
**ஜெய்**
அழகுசாதன
சோப்

டாடா தயாரிப்பு

OBM.7002 TM



# சும்மா ஆடுமா சிண்டு?

எஸ். வி. ஆர்.

''நமஸ்காரம், பிரின்ஸ்பால் சார்!''

''நமஸ்காரம்.''

''ரொம்ப பிஸியாக இருக்கிறீர்கள் போலிருக்கிறது...''

''ஆமாம்.. ஆமாம்...''

''பாவம், இந்த ஒரு மாசம் உங்க பாடு ரொம்பத் திண்டாட்டம்தான்... எப்படித் தான் சமாளிக்கிறீர்களோ இந்த அட்மிஷன் கும்பலை யெல்லாம்?...''

''.....''

''உங்களுக்குக் கூட முன்பெல்லாம் அடிக்கடி ஒற்றைத் தலைவலி வருமே, இப்போது எப்படி இருக்கிறது?...''

''உம்... உடம்பென்றும் இந்த மாதிரி சில்லறைத் தொந்தரவுகள் இருந்துகொண்டு தான் இருக்கும்...''

''அப்படி அசட்டை செய்துவிடக்கூடாது என்கிறேன். அதுவும் உங்களைப் போன்றவர்களுக்கு உடம்பு ஆரோக்கியமாக இருக்க வேண்டியது அவசியம்... எத்தனை பேருக்கு அறிவுக் கண்களைத் திறந்து விடுகிறவர்!...''

''.....''

''நான் ஒரு சின்ன வைத்தியம் சொல்லட்டுமா? வேப்பங்கொட்டை இருக்கிறதல்லவா? அதன் பருப்பை எடுத்து, தண்ணீர் விட்டு அரைத்து, நெற்றியிலே பற்றுப் போட்டுக் கொள்ளுங்கள்....''

''உம்... உம்... செய்து பார்க்கிறேன்.''

''அப்புறம் உங்க மூத்த பிள்ளை என்ன செய்கிறான்?... ராஞ்சியிலே வேலையாய் இருந்தான் இல்லையா?''

''ஆமாம்... இப்போ ஆபீஸ் விஷயமா ரஷ்யா போகப் போகிறான்...அடுத்த மாசம்.''

''அப்படியா? ரொம்ப சந்தோஷம். ரஷ்யாவிலேதான் என் அத்தான் மச்சினன் இருக்கான். அவனுடைய விலாசம் தரேன். உங்க பையனைப் போய்ப் பார்க்கச் சொல்லுங்கள்... எந்த உதவி வேண்டுமானாலும் முகம் சுளிக்காமல் செய்து தருவான்!''

''சரி, பார்க்கலாம்...''

''உங்க பெண்ணுக்கு மாப்பிள்ளை தேடிக் கொண்டிருந்தீர்களே, வரன் கிடைத்ததோ?''

''இன்னும் பார்த்துக் கொண்டுதான் இருக்கேன். இன்னும் குதிரமாட்டேனென்கிறதே!''

''எனக்குத் தெரிந்த ஒரு பையன் இருக்கான். ஜாதகம் தரேன் பாருங்கள்... பையன் அசல் ராஜா மாதிரி இருப்பான். அமெரிக்கக் கம்பெனியிலே வேலை.''

''உம்...உம்...''

''உங்க கடைசிப் பையன் சந்துரு எலெக்ட்ரானிக்ஸ் கிராஜுவேட்தானே?''

''ஆமாம்.''

''எங்கே வேலை பார்க்கிறான்?''

''இப்போ சும்மா வீட்டிலே இருக்கான்.''

''நம்ம நண்பர் ஒருத்தர் ஒரு ரேடியோத் தொழிற்சாலை ஆரம்பிக்கப் போகிறார்... அங்கே இவன் என்ஜினீயராப் போகலாமே?''

''.......''

''உங்க வீட்டுச் சப்போட்டா மரம் கடுக்கா அளவுக்குத்தான் இன்னமும் காய்க்கிறதா?''

''ஆமாம்...''

''இப்போ கோயமுத்தூர் விவசாயக் கல்லூரியிலே புதுசா சப்போட்டா விதை ஒண்ணு உருவாக்கி யிருக்காளாம்.... பழம் ஒவ்வொண்ணும் சாத்துக்குடி சைஸ் இருக்கிறதாம்...உங்களுக்கென்று இந்தச் சப்போட்டாக் கன்று வரவழைத்துத் தருகிறேன்.''

''சரி, வரவழையுங்கள்...''

''உங்க வீட்டுப் பாமரேனியன் நாய்க்கு...''

''சார், மன்னிக்கணும்.... நீங்களாகவே இத்தனை நேரம் என் விஷயத்திலும் என் குடும்ப விஷயத்திலும் அக்கறை எடுத்துக் கொண்டு நிறைய உதவிகள் செய்வதாகச் சொன்னதற்கு நன்றி. ஆனால் ஒரு விஷயம்: எங்க காலேஜிலே எந்தக் கிளாஸிலேயும் எந்த சீட்டும் இல்லே... எல்லாம் நிரம்பி விட்டது. ஐயாம் வெரி ஸாரி... உங்க பையனுக்கு எங்க காலேஜிலே சீட் கிடைக்காது!...''

''காலேஜ் சீட்டா?.... யாருக்கு சார் வேணும் சீட்?... நான் உங்களைச் சீட் கேட்டேனா என்ன?''

''நீங்க வாய் திறந்து கேட்கா விட்டால் என்ன?... இவ்வளவு அக்கறையாக என் குடும்ப விஷயத்தை யெல்லாம் விசாரித்தீர்களே, அதிலிருந்து என்னால் ஊகித்துக் கொள்ள முடியாதா விஷயத்தை?''

''அட போங்க சார், நீங்க ஒண்ணு! இந்த உலகிலே யார் உங்களிடம் அக்கறை காட்டினாலும் சீட்டுக்காகத்தான் இருக்கணுமா? அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய் சார்!... எனக்குச் சீட்டும் வேண்டாம், நோட்டும் வேண்டாம்!... எனக்குப் பிள்ளை குட்டியே கிடையாது!...''

''அப்போ எதற்காக என் நலம் விசாரித்தீர்களாம்? உதவி புரிகிறேன் என்று சொன்னீர்களாம்?''

''நான் உங்ககிட்டே படித்த பழைய மாணவன் ஸார்... உங்க ஆசிர்வாதத்திலே இன்னிக்கு முன்னுக்கு வந்து, வசதியாக இருக்கிறேன்... அந்த நன்றிக் கடனைத் திருப்பிச் செலுத்துவதற்காகத்தான் உங்களுக்கு உதவ முன்வந்தேனாக்கும்!''

பிரின்ஸ்பால் மூர்ச்சையானார்!

# டெலிவிஷன் தேவையா?



டெலிவிஷன் துறையில் புதிய முன்னேற்றம். இசைத் தட்டுகள் போல, டெலிவிஷன் படங்களையும் ''பிளாஸ்டிக் நகட்டில்'' பதிவு செய்து விடலாம்.

**சென்னைக்கு அடுத்த ஆண்டு டெலிவிஷன் வரப்போகிறது என்று பாரத அரசு தகவல் ஒலிபரப்புத் துறை அமைச்சர் திரு குஜ்ரால் கூறி விட்டார். டெலிவிஷன் வந்தால் மக்களுக்கு என்ன நன்மை? அல்லது தீமை? இதோ சில கருத்துக்கள்:**

திரு பி. ஆர். மூகர்ஜி ஏர் இந்தியா நிறுவனத்தின் சென்னை அலுவலகத்தில் அக்கௌண்ட்ஸ் மானேஜராகப் பணியாற்றுகிறார். ஏடனில் நான்கு ஆண்டுகளும், ரோம் நகரில் மூன்றாண்டுகளும் தங்கியிருந்து விட்டுத் தாயகம் திரும்பியுள்ள திரு மூகர்ஜி டெலிவிஷன் சென்னைக்கு வருவதை வரவேற்கிறார். ''பாரதத்தின் அந்தஸ்து டெலிவிஷன் மூலம் உயரும்'' என்பது அவரது கருத்து. ''ரோம் நகரிலும் ஏடனிலும் நான் தங்கியிருந்தபோது 'போர்' அடிக்கிறது என்று என் மனைவி கூறியதே இல்லை! வீட்டோடு அடைபட்டுள்ள பெண்மணிகளுக்கு இது மிகவும் பயன்படும். ஏடனில் மத சம்பந்தமான நிகழ்ச்சிகள் டெலிகாஸ்ட் செய்யப்படுவதை மக்கள் பெரிதும் ரசிப்பார்கள். ரம்ஜான் முதலிய பண்டிகைகளின் போது மெக்காவில் நடைபெறும் நிகழ்ச்சிகளை டெலிவிஷனில் கண்டு மகிழ்வது வழக்கம்.''

''தமிழ் நாட்டில் பண்டிகைகளுக்குக் குறைவேது? வேறு என்னென்ன வகையில் டெலிவிஷன் மூலம் பயனடைய வழியுண்டு?''

''குறிப்பாகப் பகைமைப் புரட்சிக்குப் பெருதவி புரியும்.''

''கொலை, கொள்ளை, கற்பழித்தல் முதலிய காட்சிகளைத் திரைப்படங்கள் வாரி வழங்குகின்றன. இந்த 'வேல்' டெலிவிஷனையும் பிடிக்காது என்பது என்ன நிச்சயம், மிஸ்டர் மூகர்ஜி?''

''மேலைநாடுகளில் பொதுவாக இம்மாதிரி காட்சிகள் கொண்ட நாடகங்களையும் திரைப் படங்களையும் இரவு ஒன்பது மணிக்கு மேல் தான் டெலிகாஸ்ட் செய்வது வழக்கம். குழந்தைகளுக்கென மாலையில் பள்ளியிலேயே காணும்படி விசேஷ நிகழ்ச்சிகளைக் கடைசி 'பீரியட்'டில் போட்டுக் காட்டலாம். திரைப் படங்களும் மஞ்சள் பத்திரிகைகளும் இழைக்காத தீமைகளை டெலிவிஷன் செய்துவிடப் போகிறதில்லை.''

''இந்த ஏழை நாட்டுக்கு இது தேவை தானா?''

''எல்லாருமே பண வசதி படைத்தவர்கள் இல்லை; ஆதலால் 'டெலிவிஷன் வேண்டாம்' என்ற வாதத்தை நான் ஒப்புக் கொள்ள முடியாது. இது நவீன யுகம்.''

''சினிமா இதனால் பாதிக்கப்படுமா?''

''டெலிவிஷன் மலிவான விலைக்குக் கிடைத்தால் சினிமா பாதிக்கப்படுவது நிச்சயம். இப்போது டிரான்ஸிஸ்டர் ரேடியோக்கள் மலிவாகக் கிடைக்கவில்லையா? அது போல் டெலிவிஷனும் பரவினால், அப்புறம் வீட்டில் சினிமா இருக்க யார் தியேட்டருக்குப் போவார்கள்?

'' ஆஸ்பத்திரிகளில் நோயாளிகளுக்குப் பொழுது போக்கச் சிறந்த சாதனமாய் விளங்கும் டெலிவிஷன். நான் ரோமில் இருந்த போது பங்களாதேஷ் போர்க் காட்சிகளை டெலிவிஷனில் பார்த்தேன். இந்நாட்டில் உள்ளவர்கள் பார்த்திராத காட்சிகள் அவை. இத்தகைய நல்ல வாய்ப்புக்கள் இருக்கும் போது டெலிவிஷனை ஒதுக்கி வைப்பது கூடாது!''

இன்ஷ்யூரன்ஸ் நிறுவனம் ஒன்றில் பணியாற்றும் பட்டதாரி இளைஞர் திரு பி. எஸ். கண்ணன் கூறுகிறார்:



ஹாம்பர்க் நகரில் வைத்தியர்கள் ஒரு நோயாளியின் கல்லீரலில் அறுவைச் சிகிச்சை செய்தனர். அது வண்ண டெலிவிஷன் மூலம் காட்டப்பட்டதால் வெகு தொலைவில் இருந்த வைத்திய நிபுணர்களும் சிகிச்சை எப்படி நடக்கிறது என்பதை நேரில் காண்பதைவிடத் தெளிவாகப் பார்க்க முடிந்தது.

முட்டாள் பெட்டி! - டெலிவிஷனுக்கு இப்படி ஒரு பெயர். சதா டெலிவிஷன் பார்த்துப் பார்த்து நேரத்தை வீணடித்து அறிவையும் மழுங்க அடித்துக்கொண்டிருப்பவருக்கு ஏற்றவாறு இப்படிச் சொகுசு சோபாவும் உருவாகியுள்ளது மேலைநாடுகளில். கைக்கு வசதியாக உள்ள பொத்தான்களை அழுத்தி டெலிவிஷனை இயக்கச் செய்யலாம்.



''அகில இந்திய ரேடியோ இதுவரையில் மத்திய அரசின் நிர்வாகத்திலேயே இருந்து வருவதால் ஒருதலைப்பட்சமான செய்திகள், ஆளும் கட்சிக்கு ஆதரவான விஷயங்கள், எதிர்க் கட்சி இருட்டடிப்பு, போட்டி இல்லாததால் சுவையற்ற நிகழ்ச்சிகள் ஒலிபரப்பாவது, மக்களின் உண்மையான விருப்பம் புறக்கணிக்கப்படுவது — இதெல்லாம் கண்கூடு. இது காரணமாகவே தனிக் கார்ப்பொரேஷன் கீழ் அகில இந்தியா ரேடியோ இயங்க வேண்டுமென்பது பொதுமக்களின் கருத்தாக உள்ளது. மூன்று நான்கு தனித் தனி கார்ப்பொரேஷன்களாக இருந்தால் கூட நல்லது. போட்டா போட்டியில் நிகழ்ச்சிகள் நல்லபடியாக அமையும். ஆனால் இது எங்கே நடக்கப் போகிறது? டெலிவிஷனும் மத்திய அரசாங்கத்தின் நேரடி நிருவாகத்தில் செயல்படப் போவதால் ரேடியோ நிகழ்ச்சிகளில் உள்ள குறைபாடுகள் அதிலும் இருக்கவே செய்யும்.''

மக்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் ஆளும் கட்சிப் பிரமுகர்கள் டெலிவிஷன் திரையை ஆக்கிரமித்துக் கொள்வார்களோ என்ற பயம் இவருக்கு இருக்கிறது!

''பொது இடங்களில் டெலிவிஷன் அமைத்து மக்கள் பார்க்கும்படி வசதி செய்து தரலாமல்லவா?''

''செய்யலாம். ஆனால் அது பஞ்சாயத்து ரேடியோ மாதிரிதான் செயல்படும். ரிப்பேரான டெலிவிஷன் மாதக் கணக்கில் பழுது பார்க்கப்படாமல் இருக்கும். வேலை செய்தாலும் நிகழ்ச்சிகள் சுவையாய் இராது!''

''ரேடியோவில் வர்த்தக ஒலிபரப்பு இடம் பெற்றுள்ள மாதிரி டெலிவிஷனிலும் இடம் பெற்றால் பத்திரிகைகள் பாதிக்கப்படுமா?''

''நிச்சயமாக. நாளடைவில் பத்திரிகைகளுக்கு விளம்பரம் கொடுப்பதை விட டி.வி.யில் கொடுப்பதே மேல் என்று உற்பத்தியாளர்கள் கருதக் கூடும். விளம்பரங்கள் குறைந்தால் பத்திரிகைகளின் நிலை என்னவாகும்' என்று கூறவும் வேண்டுமா? டெலிவிஷன் பரவினால் ரேடியோவே பாதிக்கப்படும் என்பது நிச்சயம்.''

இண்டேன் விநியோகஸ்தர் திருமதி இந்திரா தாமோதரன் இங்கிலாந்தில் ஐந்து ஆண்டு காலம் வசித்தவர். அவரது கருத்துக்களைப் பார்ப்போம்.

''குழந்தைகளுக்கென்று நல்ல திரைப் படங்கள் நம் நாட்டில் தயாரிக்கப்படுவதில்லை. இதற்கு ஈடு செய்யும் வகையில் குழந்தைகளுக்கென டெலிவிஷனில் நல்ல நாடகங்களைத் தயாரித்து அளிக்கலாம். சாரணர் இயக்கம், சமூக சேவை, விளையாட்டுக்கள் இவைகளையும் வழங்கலாம்.''

இந்தியாவில் தயாரான டெலிவிஷன் 'டியூப்'கள்





''பாரதம் ஏழை நாடு. இதற்கு டெலிவிஷன் வேண்டாம் என்று சிலர் கருதுகிறார்களே?''

''நியாயம்தான். டி. வி. வாங்கச் சக்தியில்லாதவர்கள் கூடக் கடனுக்கோ தவணை முறையிலோ வாங்குவார்கள். 'அடுத்த வீட்டில் கூட டி. வி. வாங்கிவிட்டார்கள். நமக்கு வாங்க வக்கில்லை!' என்று இல்லத்தரசி ஏங்குவாள்.''

''பொது இடங்களில் டி. வி. அமைக்கலாமா?''

''வீட்டுக்கு வீடு ரேடியோ இருப்பதால் மக்களுக்கு அதில்

மோகம் ஏற்படுவதில்லை. டெலிவிஷன் நமக்குப் புதிதாகையால் பிள்ளைகள் வகுப்புக்களுக்குச் செல்லாமல் அதைப் பார்க்க வந்துவிடுவார்கள்.''

பிரிட்டன், பிரான்ஸ், ஸ்விட்ஜர்லாந்து, அமெரிக்கா, கானடா, ஜப்பான், சிங்கப்பூர், பிலிப்பைன்ஸ் முதலிய நாடுகளை யெல்லாம் தமது மனைவியை அழைத்துக்கொண்டு மூன்று மாத காலம் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்துள்ள அம்பாசமுத்திரம் டாக்டர் வி. ரகுபதி சொல்கிறார்:

''டி. வி. என்ன, புதிய விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்கள் எல்லாமே நன்மைகளையும் அளிக்கும்; தீமைகளையும் அளிக்கும். அவற்றை நாம் எப்படிப் பயன்படுத்திக் கொள்ளுகிறோம் என்பதுதான் கேள்வி. சிங்கப்பூரில் தமிழ்ப் படங்களுக்கு டி. வி. யில் முக்கியத்துவம் அளிக்கிறார்கள். ராமாயணம், மகாபாரதம், இவற்றை நானும் என் மனைவியும் டி.வி.யில் பார்த்து ரசித்தோம். கொலை, கொள்ளை குத்துவெட்டுக் காட்சிகளைப் பார்க்கவில்லை. ஸ்விட்ஜர்லாந்து ரயில் நிலையத்தில் காத்திருக்கும்போது ரயில்களின் வருகையைப் பற்றிய அறிக்கையை டி. வி.யில் காண முடிந்தது. ரயிலுக்காகக் காத்திருக்கும் அலுப்புத் தெரிவதில்லை. டெட்ராயிட் விமான நிலையத்தில் விமானம் கிளம்பத் தாமதம் ஏற்பட்டது. அந்த நேரத்தில் டெலிவிஷனில் சினிமாப் படம் காண்பித்தார்கள். இல்லாவிட்டால் 'போர்' அடித்திருக்கும்!

''சாதாரண டி. வி. செட்டில் கலர் டி.வி. காண்பிக்க முடியாது. முதலில் சாதாரண 'பிளாக் அண்ட் ஒயிட்' டி. வி. தொடங்கிப் பிறகு வண்ண டி.வி.யாக மாற்றினால் மக்களுக்கு இரட்டிப்புச் செலவு ஆகும். எனவே எடுத்த எடுப்பிலேயே இங்கு வண்ண டி.வி. தொடங்குவது நலம்.

''கல்வி வளர்ச்சிக்கு டி. வி. பெரிதும் பயன்படும். சான்றாக மருத்துவமனைகளில் நிகழும் அறுவைச் சிகிச்சைகளை டி. வி.யின் மூலம் மருத்துவ மாணவர்களுக்கு வழங்கலாம். 'ஹாஸ்டன் வோர்ல்ட் மெடிகல் சென்டர்'ில் காலஞ்சென்ற வேல்ஸ் இளவரசருக்கு ஓர் ஆபரேஷன் நிகழ்ந்தது. அதனை டெலிவிஷனில் காண்பித்தார்கள். முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி லிண்டன் ஜான்ஸனுக்கும் அதே மருத்துவமனையில் நிகழ்ந்த ஓர் அறுவைச் சிகிச்சையை மருத்துவ மாணவர்களுக்கு டெலிவிஷனில் காண்பித்தார்கள்.''

பேட்டி: **பரணன்**

# பத்திரிகைகள் எச்சரிக்கின்றன....



டெலிவிஷன் பார்த்தும் பார்த்தும் பழகிவிட்டால் பிறகு சாதுர்யமாக ஓர் உரையாடலில் பங்கேற்றுக் கொள்ளும் ஆற்றலையே நீங்கள் இழந்து விடுகிறீர்கள். கணவன், மனைவியுடன் அளவளாவுகிற கால அளவு குறைந்து போகிறது. திருமண வாழ்க்கை உப்புச் சப்பற்றதாகி விடுகிறது. 'நாளைய உலகம்'

★

டெலிவிஷன் மூலம் கற்றுக் கொண்ட வார்த்தைகளை எழுதிக் காட்டுமாறு குழந்தைகள் கேட்டுக் கொள்ளப்பட்டனர். அமெரிக்காவில் நடந்த இந்தப் பரீட்சையின் போது ஆறு வயது முதல் 12 வயதுவரை உள்ள குழந்தைகள் பதினைந்து விதமான பீர்புட்டிகளின் பெயர்களையும் பதின்மூன்று விதமான சிகரெட் பாக்கெட்டுகளின் பெயர்களையும் எழுதின. ஒரு சலவைத் தூளின் பெயரை நூற்றுப் பத்துக் குழந்தைகள் எழுதின. ''எலிமெண்டரி இங்லீஷ்''

டெலிவிஷனால் அரிய கலைகளான மிருதுத் தன்மை, பரிவு, நிதானம், அன்பு எல்லாம் பலவீனப் பட்டுப் போகின்றன. -''மக்கால்ஸ்''

★

பதினெட்டு வயதாவதற்குள் ஒரு குழந்தை 22,000 மணி நேரம் டெலிவிஷன் பார்த்திருக்கிறது. பள்ளிக்கூடம் போவது 12000 மணி நேரம். ''ப்ளெய்ன் ட்ருத்''

★

கொலை கொள்ளை போன்ற பயங்கரக் காட்சிகள் டெலிவிஷனில் பரவலாக இடம் பெறுவதால் ஒரு தலைமுறையின் இளைஞர்கள் கண்டிப்பாகப் பாதிக்கப் படுவார்கள் என்ற கருத்தை நீண்ட காலமாகவே நாம் கொண்டிருக்கிறோம். மிருதுத் தன்மை நியாய உணர்வு இவற்றிலிருந்து விலகி விலகி அவர்கள் சென்று கொண்டிருக்கிறார்கள். --ஸாட்டர்டே ரெவ்யூ



# சொல்லுங்கள் பார்க்கலாம்...

PUBLIC CARRIER

டிவிஎஸ் தொகுப்பைச்
சேர்ந்த ஸதர்ன் ரோட்வேஸ்
நிறுவனத்தைத் தவிர
வேறு எந்த லாரி சர்வீஸில்

- லாரிகள் தினமும் 77,849 கி.மீ.
  ஓடுகின்றன? தென்னகமெங்கும்
  575 கிளைகள் உள்ளன?
- பார்சல்கள் பழுதடையாமல்
  தாமதமின்றிப் போய்ச் சேர இரு
  இடங்களுக்கிடையே நேரிடையான
  பார்சல் சர்வீஸ் உள்ளது?
- லாரிகள் செல்லும் வழியெல்லாம் பழுது
  பார்க்கப் பட்டறைகள் உள்ளன?
- பார்சல்களின் அளவு எதுவாக இருந்தாலும், ஒரே
  மாதிரியான அக்கறை எடுத்துக் கொள்ளப்படுகிறது?
- பார்சல்கள் நடுவழியில் களவு போகாமல் இருக்கின்றன?
- குறித்த நேரத்திலும், பத்திரமாகவும், ஒழுங்காகவும்,
  நம்பிக்கைக்குகந்த வகையிலும் பார்சல்களைக்
  கொண்டு சேர்க்கும் 60 ஆண்டின் புகழ் நிறைந்த
  சேவை உங்களுக்குக் கிடைக்கிறது?

ஈடு இணையற்றவர்களிடமே உங்கள் பார்சல்களை
ஒப்படையுங்கள்.

உங்கள் நம்பிக்கைக்குரியது டிவிஎஸ்




ஸதர்ன் ரோட்வேஸ்
பிரைவேட் லிமிடெட்
(டிவிஎஸ் தொகுப்பைச் சேர்ந்த
நிறுவனங்களில் ஒன்று)
மதுரை

FDS SR 1977 TMA

# ஒரே ஒரு காசு செலவில் 1 சேலை அல்லது 3 சட்டைகள் பனிபோல் வெண்மை பெற...

# மாக்ஸிம்*

எல்லா துணிகளுக்கும் உகந்த ஏற்றமிகு ஒயிட்னர்

**எவ்வளவோ சிக்கனமானது!**

எந்த ஆடையாக இருந்தாலும் சரி, அதற்குப் புத்தம் புதிய வெண்மை ஒளியேற்ற சராசரி ஒரு துளி மாக்ஸிம் போதும். ஒவ்வொரு மாக்ஸிம் பாட்டிலும் சுமார் 1200 துளிகள் கொண்டது என்பது உங்களுக்குத் தெரியுமோ என்னவோ! எனவேதான் மாக்ஸிம் மிகவும் சிக்கனமான, வீரியமுள்ள நீலநிற திரவ வடிவ ஒயிட்னராக விளங்குகிறது. மேலும் விசேஷ ட்ராப்பர் மூடி கொண்ட பிளாஸ்டிக் பாட்டிலாக இருப்பதால், இன்னும் லாபம். ஏனெனில் தேவைக்கு மேல் ஒரு துளி கூட சிந்தாது. எனவே துளியும் வீணாவதில்லை, துணியும் நீலம் படிவதில்லை.




**எல்லா துணிகளுக்கும் ஏற்றது**

எல்லாவித துணிகளுக்கும் நீங்கள் மாக்ஸிம் உபயோகிக்கலாம். 'டெரீன்' 'டெரீன்'/காட்டன், நைலான், உல்லன் சில்க் மற்றும் காட்டன் போன்ற எல்லா துணிகளுக்கும் மாக்ஸிம் வெண்மையூட்டி புதிய மெருகேற்றுகிறது. தவிர, மாக்ஸிம் துணியில் கறை ஏற்படுத்துவதுமில்லை.

**உபயோக முறை மிகமிக எளிது**

மாக்ஸிம் உபயோக முறை மிகமிக் எளிதானது. துணிகளை முதலில் சோப் அல்லது பிற சலவைச் சாதனங்கள் மூலம் சுத்தமாக துவைத்து நன்றாக அலசி எடுக்கவும். பிறகு வாளியிலுள்ள (5 லிட்டர்) நல்ல தண்ணீரில் 10-15 துளிகள் மாக்ஸிம் விட்டுக் கலக்கவும். (பழுப்பேறிய துணிகளென்றால் கொஞ்சம் கூடுதல் துளிகள் மாக்ஸிம் சேர்க்கவும்) பின்பு துணிகளை 10—15 நிமிடங்களுக்கு அதில் ஊறவைக்கவும். மீண்டும் அலச வேண்டாம். அப்படியே உலரவிடவும்.






ஒவ்வொரு காசுக்கும் உரிய பலனைத் தருகிறது மாக்ஸிம்

GHH-23 TAM

*Regd. T.M. Geoffrey Manners & Co., Ltd.

Registered No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka இலங்கையில் விலை 50 சதம் (தபால் செலவு தனி)